நீங்களே கண்டுகொள்ளுங்கள்

# மின்னலடிக்கும், ஸூப்பர் ரின் வெண்மை.. இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை







வேளை தவறாமல் உபயோகியுங்கள் ஸூப்பர் ரின். எத்தகைய வெள்ளைவெளேர் சலவை கிடைக்கிறது பாருங்கள்—இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை அது. காரணம், மேம்பட்ட வெளுப்பூட்டும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின். நீங்களே கண்டுகொள்ளுங்கள்.




**இதர டிட்டர்ஜெண்ட் வில்லை,பார் எதனையும் 'விட அதிக வெளுப்பூட்டும் சக்தி.**

லிண்டாஸ்-RIN 34-3317 TH (RR)

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# Kalki Shopping Page



# ராஜாஜி – மாபெரும் எதிர்ப்பாளர்

எனது இளம் வயதிலிருந்தே ராஜாஜியை நான் அரசியல்வாதிகளிடையே ஒரு பேரறிவாளராகக் கருதினேன்.

நமது தாய்நாட்டின் விடுதலைக்குப் பாடுபட்டு வந்த நாங்கள் எல்லோரும், சுதந்திரப் போராட்டத்தில் தீவிரமாகத் தார்மீகத்தை மகாத்மா புகுத்தியதால் ஆன்ம ஊக்கம் பெற்றிருந்தோம். வெள்ளைக் கதராடை — அது ஒரு சட்டையோ, குல்லாவோ, குர்த்தாவோ எதுவானாலும் சரி — எளிமையை மட்டுமின்றிப் பரிசுத்தத்தையும் எடுத்துக்காட்டிற்று. அதனை சுதந்திரப் போராட்ட வீரர்களின் அலங்காரச் சீருடை என்று பண்டிட்ஜி குறிப்பிட்டாலும் காந்திஜி கதர், சரீர உழைப்பின் உயர்வையும் ஆன்மிகத்தின் மதிப்பையும் உணர்த்தும் சின்னம் என்றே கருதி வந்தார்.

தமிழ்நாட்டில் கதர் இயக்கம் காட்டுத் தீ போல் பரவியது. இதற்கு ராஜாஜிக்கே பெருமளவு நன்றி செலுத்த வேண்டும். வேறு பல நிர்மாணத் திட்டங்களான ஹரிஜனப் பணி, மதுவிலக்கு, ஆதாரக் கல்வி ஆகியவற்றுக்கும் தமிழ்நாட்டில் பேராதரவு இருந்ததற்குக் காரணம் ராஜாஜியின் தலைமையே.

ஏழைகள் சார்பாக அவர் நடத்திய தார்மிகப் போர், ஹரிஜனங்களின் ஆலயப் பிரவேசத்துக்காக அவர் நிகழ்த்திய போராட்டம், மதுக்கடை மறியலில் ஈடுபட்டுச் சிறைவாசத்தை எதிர்கொண்ட தொண்டர்களுக்கு அவர் அளித்த தலைமை ஆகியவை எக்காலத்திலும் நினைவில் இருக்கும்.

மகாத்மா ராஜாஜியைத் தமது அந்தரங்க ஆலோசகர்களில் ஒருவராகக் கருதினார். இது எதேச்சையாக ஏற்பட்டதல்ல. மகாத்மா இந்தியாவில் அரசியல் ரீதியாக எடுத்த முதல் மாபெரும் முடிவு ரௌலட் சட்டத்தை எதிர்த்துப் போராடுவது என்பதுதான். அம்முடிவு சென்னையில் ராஜாஜியைக் கலந்தாலோசித்த பின்னர்தான் எடுக்கப்பட்டது என்பது குறிப்பிடத் தக்கது. காந்திஜி, செயல் திறனுடன் கூட தார்மீகக் கோட்பாடுகளுக்கும் அஹிம்சாத் தத்துவத்துக்கும் தாம் முக்கியத்துவம் தருவதைப் புரிந்துகொள்ளக் கூடிய நபராக ராஜாஜி விளங்குவதைக் கண்டார்.

இந்நாடு சுதந்திரம் பெற்ற பிறகு ராஜாஜி மக்களுக்குப் பல வழிகளில் சேவை புரிந்தார். கடைசி மூச்சு வரை அவர் அறிவுக் கூர்மையுடன் இருந்தார். அரசியலில் ஊழல்களைச் சற்றும் விட்டுக் கொடுக்காமல் எதிர்த்தார்.

ராஜாஜியுடன் நெருங்கிப் பழகும் நல்லதிர்ஷ்டம் எனக்குக் கிடைக்கவில்லை. ஆனால் விவசாயப் பிரச்னைகள் பற்றிய எனது சில கருத்துக்களை ஆதரித்து அவர் அவ்வப்போது எனக்குச் செய்தி அனுப்புவார். இந்தக் கருத்துக்களுக்கு அவர் அளித்துள்ள ஆசிகளை நான் என்றும் நினைவில் வைத்துப் போற்றுவேன்.

இன்றைய கால கட்டத்தில் தேசம் ராஜாஜி போன்ற மனிதர்களை நினைவில் கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகிறது. அவர்கள் தங்கள் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தாய் நாட்டுக்காகத் தியாகம் செய்தது மட்டுமின்றி அடிப்படை லட்சியங்களான நேர்மை, எளிமை, தூய்மை, உண்மை ஆகியவற்றைக் கடைப்பிடித்தார்கள். இந்தக் கோட்பாடுகள் நமது மாபெரும் இதிகாசங்களின் கருப்பொருளாகியுள்ளன. இந்த இதிகாசங்களை எளிய நூல்களாக எழுதித் தந்துள்ள ராஜாஜி அந்த உருவில் மதிப்பு மிக்க சொத்தை நமக்கு விட்டுச் சென்றிருக்கிறார். அடுத்தடுத்து வரும் பல தலைமுறையினர் இவற்றைப் படித்து ஆன்ம ஊக்கம் பெறுவார்கள்.

பாரதப் பிரதமர் சரண்சிங்



ராஜாஜி ஒரு மாபெரும் எதிர்ப்பாளர். அவர் தமது மனச்சாட்சிக்கு விரோதமாக எதையும் எப்போதும் செய்ததில்லை. ஆனால் அவரது பெருமை என்னவெனில் தமது எதிர்ப்பு எந்தக் கட்டத்திலும் முட்டுக்கட்டையாகத் தாழ்ந்து விடச் சற்றேனும் அனுமதியாததுதான். அவர் ஒரு மாபெரும் நிர்வாகியும் கூட. எப்போதும் ஆக்கபூர்வமான யோசனைகள் கூறுவதில் நம்பிக்கை கொண்டிருந்தார். நசிவு அரசியலில் அல்ல.

ஸ்தாபனத்திடம் விசுவாசமாக இருப்பதைவிட அடிப்படைக் கொள்கைகளில் விசுவாசம் காட்டுவதே முக்கியம் என அவர் நம்பினார். அவர் நம்பிக்கை கொண்டிருந்த மேன்மையான தார்மிக உணர்வு அரசியலைத் தொழிலாகக் கொண்ட அரசியல்வாதிகள் காண்பிக்கும் சர்வ சாதாரண அன்றாடத் தார்மிக உணர்வுகளைப் போலன்றி அவையெல்லாம் கடந்து நின்றது. எனவேதான் அவர் தமது இறுதி நாள்வரை புரட்சிகரமான நோக்கு உடையவராக விளங்க முடிந்தது. அவர் எதையும் தேக்க நிலையில் கண்டதில்லை. எண்ணம், சொல், செயல் அனைத்திலும் விருவிருப்பும் வேகமும் காட்டிய வீரர் அவர்.

(இந்தச் சிறப்பிதழுக்கென்றே பாரதப் பிரதமர் எழுதி அனுப்பியது.)

---

# இவர்கள் அரசியல் வாதிகளானால்...

வரும் 'லோக்சபா' தேர்தலில் போட்டியிட மத்தியப் பிரதேசத்தில் இரண்டு கொள்ளைக்காரர்கள் (முன்னாள்!) முடிவு செய்திருக்கிறார்களாம்! மேலும் இரு விஞ்ஞானிகளும் களத்தில் குதித்திருக்கிறார்கள். இவர்களும், வேறு சில 'முன்னாள்'களும் பொதுக் கூட்டத்தில் எப்படிப் பேசுவார்கள் என்ற கற்பனையின் விளைவு.....

**முன்னாள் இரும்புக்கடைக்காரர்:**

''..... இத்தனை நேரம் நான் கூறிய வாக்குறுதிகளை, மற்ற அரசியல் வாதிகளைப் போல 'துருப்பிடிக்க' விடமாட்டேன் என்று 'ஆணித்தரமாய்' கூறிக்கொள்கிறேன்.... எனவே 'ஸ்கைலாப்' சின்னத்தில் 'முத்திரையடித்து' என்கரத்தை 'இரும்புக்கரமா'க்கக் கேட்டுக் கொள்கிறேன்....''

**முன்னாள் கொள்ளைக்காரர்:**

''.... இப்போதும் நான் கொள்ளையடிக்கவே வந்துள்ளேன்... ஆனால் உங்கள் பணத்தை அல்ல.... உங்கள் இதயத்தைக் 'கொள்ளை கொல்ல,' உங்களது 'வாக்கை' 'கொள்ளை கொல்ல' — மன்னிக்கவும் பழைய ஞாபகம் - கொள்ளை கொள்ள வந்திருக்கிறேன். உங்களைச் சுரண்டும் பேய்களுக்குக் 'கொள்ளி' வைப்பேன் என்று கூறிக்கொள்கிறேன்... எனக்குப் 'பட்டாக்கத்தி' சின்னத்தில் 'ஓட்டு குத்த' வேண்டுகிறேன்...''

**நடிகர்:**

''இத்தனை நாள் எனக்குப் பின்னணி பாடினார்கள்; இனிமேல் நானே முன்னணியில் பாடப்போகிறேன்... (உய்.. உய்..ய்..-விசில் சப்தம்) உங்கள் வாழ்த்து என் காதில் தேனாய், பாலாய்... ('அட, சட்.. மறந்து போச்சே. இதுக்குத்தான் அவனை இரண்டு நாள் முன்னாடியே வசனம் எழுதித்தரச் சொன்னேன்.. படுபாவி காலேலே தான் தந்தான்'). யார்யாரோ பின்னணி பாடியது போக, இன்று நீங்கள் பின்னணி பாட, நான் முன்னணியில் நிற்கிறேன்... எனக்கு 'பிலிம்' சின்னத்தில் 'ஓட்டுப் பதிவு' செய்யுங்கள்...''

**கவிஞர்:**

''..நாட்டினையே காத்திட, நல்ல
பணி புரிந்திட
பாட்டெழுதும் பாவலன்நான், பந்தல்
கீழ் நிற்கின்றேன்;
ஏடெழுதும் 'பேனா'வைச் சின்னமாகக்
கொண்ட எனக்கு
ஓட்டெழுத வேண்டும் நீவிர்! வணங்கு
கிறேன் வேண்டுகிறேன்''

**முன்னாள் வானிலை அறிவிப்பாளர்:**

''... உங்கள் ஓட்டைப் பெற்று, இங்கிருந்து 3000 கி.மீ. தொலைவில் டில்லியில் நான் மையம் கொண்டிருந்தாலும், பாராளுமன்றம் முடிந்த அடுத்த சில தினங்களில் அங்கிருந்து நகர்ந்து — விமானத்தில் நகர்ந்து — உங்கள் அன்பினால் தீவிரமாக்கப்பட்டு, நமது தொகுதிக்கு வடக்கு அல்லது வடமேற்கு முகமாக வந்தடைவேன்.. தொகுதி முழுவதும் சூறாவளிச் சுற்றுப்பயணம் செய்வேன்... எனக்குக் 'காயாத கருவாடாம்' சின்னத்தில் — அதன் மேல் புறத்திலோ, வலப்புறத்திலோ வாக்கிடுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்...''

**விஞ்ஞானி:**

''.. நாட்டைச் சோதனைச் சாலையாக்கி, 'பிப்பெட்டு' மூலம் உறிஞ்சுவதைப் போல ரும் லஞ்சக்காரர்களாய் மக்களை உறிஞ்சும் அரசியல் வாதிகளை 'டிரான்ஸ்ஃபார்ம்' செய்வேன்.. உங்கள் நம்பிக்கை முழுப்பங்கும், ஆதரவு முழுப்பங்கும் கலந்து வரும் 'ஓட்டு' என்ற 'ப்ராடக்ட்'-ஐ என்னிடம் அளியுங்கள்... அதனை 'கேடலிஸ்ட்' (Catalyst) ஆகக்கொண்டு செயல்படுவேன்...''

—ஸாரங்கன்



அனைவருக்கும்
மனநிறைவு தரும்
சுவைமிகு ஊறுகாய்!

# டி.எஸ்.ஆர்
# வெஜிடபிள்
# ஊறுகாய்

டி. எஸ். ஆர். & கோ.,
'கோகுல் கார்டன்ஸ்',
கும்பகோணம்.




Criterion TSR 3375 TM

# திரையுலகில் ராஜாஜி





○ திக்கற்றபார்வதி படத்தில் ஸ்ரீகாந்த்

○ சிங்கீதம் சீனிவாசராவ்

○ லட்சுமி

ராஜாஜி நூற்றாண்டு நெருங்கிக் கொண்டிருக்கிறது என்ற எண்ணம் எனக்கு ஏற்பட்ட உடனேயே ராஜாஜியைப் பற்றி ஒரு சிறிய டாக்குமெண்டரி படம் எடுக்கலாமே என்று நினைத்தேன். நான் நினைப்பதற்கும் பிலிம் டிவிஷனிலிருந்து ''ராஜாஜியைப் பற்றி ஒரு படம் எடுங்கள்'' என்று கேட்பதற்கும் சரியாக இருந்தது. நான் அதை ஒப்புக்கொண்டு படத்தை எடுக்க ஆரம்பித்தது ஆகஸ்டு மாதத்தில். பிலிம்ஸ் டிவிஷன் டிசம்பர் மாதத்தில் வேண்டும் என்று கேட்டிருந்தது. மூன்று மாத காலத்தில் என்ன செய்வது? பிரமித்தேன். ஆனால் ராஜாஜியின் அருளாசியுடன் எல்லாம் மளமளவென்று நடந்து முடிந்தன.

பத்திரிகை வாயிலாகவும் தனியாகத் தபாலிலும் ராஜாஜியைப் பற்றி அறிந்தவர், தெரிந்தவர் எல்லோருக்கும் வேண்டுகோள் விடுத்தேன். இதன் விளைவு பல சுவையான அனுபவங்கள். லக்ஷ்மி தேவதாஸ் காந்தி, நாமகிரி அம்மாள், மத்திய அரசின் புகைப் படத் துறை, பாரதீய வித்யா பவன், மேற்கு வங்க அரசு, இந்து தினப் பத்திரிகையிலிருந்து 700 புகைப்படங்கள் டைம்ஸ் ஆப் இந்தியாவிலிருந்து பல்வேறு புகைப்படங்களும் விவரங்களும் — இப்படிப் பல்வேறு நிறுவனங்களிலிருந்தும், தனிப்பட்ட பெரிய மனிதர்களிடமிருந்தும் உதவிகள் கிடைத்தன. ஆனால் தமிழக அரசிடமிருந்து ஏழே புகைப் படங்கள்தான் கிடைத்தன!

''ராஜாஜி என்னை வாழ்த்தினார், அவரிடம் கையெழுத்து வாங்கினேன், ஐந்து நிமிடங்கள் பேசினாலும் அவர் சொன்ன வார்த்தைகளை மறக்க முடியாது'' — இப்படி சுயபிரதாபமாகப் பல்வேறு கடிதங்களும் புகைப்படங்களும், பல முக்கியஸ்தர்களிடமிருந்தே என்னை வந்தடைந்தன!

இந்தப் படம் எடுக்க எனக்கு மிக மிக உதவியாக இருந்தவர் திரு ராஜ்மோகன். அவர் அப்பொழுது ராஜாஜியின் சுய சரிதையை 1938ம் வருடம் வரைதான் எழுதியிருந்தார். ஆனால் எனக்கோ முழுமையான படம் எடுக்க வேண்டியிருந்தது. எனக்காக அவர் தாம் சேகரித்திருந்த வாழ்க்கை வரலாற்றின் மற்றப் பகுதி விவரங்களையும் கொடுத்தார். என்னுடன் படப்பிடிப்பின் பொழுது உடன் இருந்து உதவினார் திரு வி. ஆர். நரசிம்மன்.

முதல் இந்திய கவர்னர்ஜெனரலாக இருந்த ராஜாஜியைப் பற்றி மறைந்த மவுண்ட் பாட்டனின் கருத்துக்களை அறியவும் புகைப் படங்கள் இருந்தால் அனுப்பி வைக்குமாறும் கேட்டுக் கடிதம் எழுதினேன். சில நாட்களுக்குப் பிறகு அவர் கையெழுத்திட்ட கடிதமும் புகைப்படங்களும் எனக்கு வந்து சேர்ந்தன. ''பெரியவர்கள் என்றுமே பெரியவர்கள்தாம்'' என்று இது உணர்த்தியது.

அவர் பிறந்த இடமான தொரப்பள்ளியில் படம் எடுக்கும்போது நெருங்கிய உறவினர்களைச் சந்தித்தேன். அதில் ஒருவர் பக்கத்துக் கிராமத்தில் கர்ணமாக இருக்கிறார். வேறு ஓர் இடத்தில் ராஜாஜியின் சொந்தப் பேரனைப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தேன். அவரும் சாதாரண வேலையில் தான் இருக்கிறார். இந்தியாவின் தலைசிறந்த நிர்வாகி, மிகப் பெரிய பதவிகளையெல்லாம் வகித்தவர். ஆனால் இவரது உறவினர்கள் சாதாரண வேலையில் இருக்கிறார்கள் என்றால் ராஜாஜியின் பெருமை அதில்தானே இருக்கிறது!

டெல்லியில் படத்தின் முதற் காட்சியை ஜனாதிபதி தொடங்கி வைத்தார். அதே நாளில் லண்டனிலும் மவுண்ட்பாட்டன் தலைமையில் முதற் காட்சி நடந்தது. எல்லோரும் பாராட்டும் இந்தப் படத்தைப்





பற்றி வி. ஆர். நரசிம்மன் என்ன கூறினார் தெரியுமா?

''எனக்கு நன்னாயிருக்குன்னு சொல்றதுக்கு மனசே வராது. ஆனால் கஷ்டப்பட்டு இப்ப நான் சொல்லித்தான் ஆகணும். படம் நன்னா யிருக்கே!''

''திக்கற்ற பார்வதி' படத்தின் மூலமாகப் பல 'முதல்'களைச் சந்தித்தேன்'' என்று கூறினார் சிங்கீதம் சீனிவாச ராவ். ''முதல் முறையாகத் தேசத் தலைவர் எழுதிய படம் எடுத்தேன். இதுவரை யாருக்குமே அனுமதி வழங்காத சென்னை உயர்நீதி மன்றம் கோர்ட்டிலேயே படம் எடுக்க எங்களுக்குத்தான் அனுமதி வழங்கியது. ஹோசூர் நீதி மன்றத்தில் நாங்கள் படம் பிடித்தோம். வீணை வித்வான் சிட்டி பாபு இப்படத்துக்கு இசை அமைத்தார்.'' இப்படிப் பல ''முதல்''களை விவரித்துவிட்டுத் தொடர்ந்தார் சிங்கீதம்: ''கர்னாடகாவில் தமிழக எல்லையில் படம் எடுத்தால் 50,000 ரூபாய் மான்யம் கிடைக்கும். ஒருவர் ஹோசூருக்குப் பக்கத்தில் ஐந்து மைல் தொலைவில் கதைக்குத் தக்கபடி சிறப்பான இடங்கள் உள்ளதாகச் சொன்னார். அந்த இடங்களைச் சென்று பார்த்தோம். நாங்கள் எதிர்பார்த்தபடியே அந்த இடம் இருந்தது. அங்கேயே படப்பிடிப்பை நடத்த முடிவு செய்தோம். ஆனால் அப்பகுதி கர்னாடகாவில் ' அல்லாமல் தமிழ் நாட்டின் எல்லைக்கு உட்பட்டுத்தானிருந்தது. 50,000 ரூபாய் தேவையா, இல்லை நல்ல லொகேஷன் தேவையா? நான் ரூபாயைத் தியாகம் செய்யத் தயாராகி விட்டேன். அந்த இடம்தான் ராஜாஜி பிறந்த தொரப்பள்ளி. ராஜாஜி கதை எழுதும்போதே இந்த இடங்களை மனத்தில் எண்ணித்தான் எழுதியிருந்தாரோ என்று எண்ணச் செய்த பிரதேசம்.

''ராஜாஜி எழுதிய கதையில் நடிக்கிறோம் என்ற பெருமை நடிகர்களை இயக்கியது. நாங்கள் கேட்ட நேரத்துக்கு நடிகை லட்சுமியின் கால்ஷீட் வேறொரு மலையாளப் படத்துக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் அவர் தமது மலையாளத் தயாரிப்பாளரிடம் வேண்டி அந்தக் கால்ஷீட்டை எங்களுக்குப் பெற்றுத் தந்தார். ஸ்ரீகாந்த் முதலில் தம் நடிப்பைப் பற்றிச் சந்தேகமாகத்தான் இருந்தார். ஆனால், போகப் போக அந்த வேடத்தில் தம்மை ஆழ்த்திக்கொண்டு அந்தப் பாத்திரமாகவே மாறிவிட்டார்.

''ராஜாஜியின் ''திக்கற்ற பார்வதி'' ஒரு சிறுகதை. அதை நாங்கள் ஒரு முழு நீளப் படமாகத் தயாரிக்க வேண்டும். ஒரு சிறு கதையைப் படமாக்குவதெனில் பல சம்பவங்களை இயக்குனர் சேர்த்துக் கொள்வார். ஆனால் ராஜாஜியின் இந்தக் கதைக்கு நாங்கள் திரைக் கதை அமைக்க உட்கார்ந்தவுடன் ஆச்சரியப்படத் தக்க விதத்தில் ஒவ்வொரு சொல்லிலும் அவரே சம்பவங்களை நமக்குத் தந்திருக்கிறார் என்பது புரிந்தது. அவரது எழுத்து வன்மை என்னை வியப்படைய வைத்தது.''

○ எஸ். கிருஷ்ணசாமி

○ திருச்செங்கோடு காந்தி ஆசிரமம் ராஜாஜி இல்லத்தில் ராஜாஜி டாக்குமெண்டரி குழுவினர்.



# *It's a widening scene at Shriram Fibres*

One good thing leads to another for Shriram Fibres, leading manufacturers of Industrial Nylons.

The first product was nylon tyre cord for automotive tyres.

Then came nylon fishnet twine—proven 20% stronger than any other comparable brand.

**And now, a breakthrough - Nylon Chips.**
Shriram Fibres are the first to make Nylon Chips/Moulding Powder in India—with quality that matches the world's best.

Shriram Fibres always look ahead...keep ahead.








## Shriram Fibres Ltd.

Thiru Building.
160, Greames Road. Madras-600 006

OBM 3768 R

நீங்காத நினைவுகள்

# ராஜாஜி சித்திரம் வரைகிறார்!

மீ.ப.சோமு

"திருநெறிய தெய்வத் தமிழ்மன்றம்" என்ற நேர்த்தியான பெயரில் தருமபுரம் ஆதீன மடாலயத்தின் முன் முகப்பிலே ஒரு பெரிய அழகான மண்டபம் இருக்கிறது. பல நூறு மக்கள் உட்கார்ந்து நிகழ்ச்சிகளைப் பார்க்கவும் கேட்கவும் வசதியான முறையில் விசாலமான அமைப்போடு கூடியது இது. இந்த மண்டபத்தைத் திறந்து வைத்தவர் ராஜாஜி.

1955-ஆம் ஆண்டு ஜூன் மாதம் ஆறாந் தேதி இந்த மன்றத்தின் திறப்பு விழா நடைபெற்றது. அப்போது தருமபுர ஆதீனத்தின் தலைவராக இருந்தவர் கயிலைக் குருமணியாகிய மகா சந்நிதானம் அவர்கள். ராஜாஜியிடம் மிகுந்த மதிப்பும் ஈடுபாடும் உடையவர்.

ஜூன் ஐந்தாந் தேதி இரவு மாயவரத்துக்குப் புறப்பட்ட ராஜாஜியோடு நானும் சென்றிருந்தேன். மறக்க முடியாத ஒரு பயண அனுபவம் அது.

பல நூறு ஆண்டுகளாக நமது சைவ மடாலயங்களில் மிகுந்த ஆர்வத்தோடு பேணிப் பாதுகாத்து வருகிற சில சிறப்பான சம்பிரதாயங்களையும், சடங்குகளையும், பணிவன்போடு மதித்து அனுபவித்துக் கொண்டே விழா மண்டபத்துக்கு வந்தார் ராஜாஜி. தம்பிரான்களும் பக்தர்களும் பல அடியார்களுமாக நிரம்பியிருந்த அந்தச் சூழல் ராஜாஜியை மிகவும் கவர்ந்தது.

தமது தலைமையுரையிலே "திருநெறி" என்பதையும் "தெய்வத் தமிழ்" என்பதையும் பற்றி ஆழமான கருத்துக்களை ரசமாக எடுத்துச் சொல்லிவிட்டு மண்டபத்தைத் திறந்து வைத்தார் ராஜாஜி. அப்போது மேடையில் இருந்த பெரியோர்களுக்கும் மன்றத்திலே கூடியிருந்த அன்பர்களுக்கும் மடாலயங்களைப் பற்றிய ஒரு புதிய நூலை அன்போடு வழங்கினார்கள். அந்த நூலை வாங்கிப் புரட்டிய ராஜாஜி அதன் மேலட்டை "வெள்ளை வெளேர்" என்று மழமழப்பாக இருப்பதைத் தொட்டுப் பார்த்து ரசித்தார்.

இயற்கையிலேயே அவர் ஒரு சித்திரக்காரர்: எனவே வழவழப்பான அந்த வெள்ளை அட்டையைப் பார்த்ததும் ராஜாஜிக்குக் கை ஊறியது! எதிரே மேஜையின் மேல் வைக்கப்பட்டிருந்த ஒரு பென்சிலை எடுத்தார். அத்தனை அவசரமாக அந்த அட்டையிலே என்ன செய்கிறார் என்று, அவருக்கு அருகிலே இருந்த நான் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கும் போதே, "விறு விறு" என்று பென்சிலை ஓடவிட்டு அங்கே நின்று கொண்டிருந்த சில தம்பிரான்களை அப்படியே வரைந்து விட்டார்!

ஒரே வியப்பிலே ஆழ்ந்து போன நான் அந்தச் சித்திர அட்டையை என்னிடம் தரும்படி ராஜாஜியைக் கேட்டேன். "NO" (மாட்டேன்) என்று ஒரு குறும்புப் புன்னகையோடு அட்டையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். பிறகு சொன்னார்: "If you want to take this, I must do one more!" ("நீ இதை எடுத்துக் கொள்ள விரும்பினால், இன்னொரு படமும் வரைந்து தர வேண்டும்".)

இப்படிச் சொல்லிக் கொண்டே மேடையில் நடுநாயகமாக உட்கார்ந்திருந்த கயிலைக் குருமணி ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்களை இரண்டே நிமிஷத்தில் 'மளமள' என்று அந்த அட்டையிலே வரைந்து விட்டார் !

"இந்தா, இப்போது நீ இதை எடுத்துக் கொள்ளலாம்!" என்று சொல்லி அட்டையோடு அந்தப் புத்தகத்தையே என் கையிலே கொடுத்தார் ராஜாஜி, சிரித்துக் கொண்டே!

ராஜாஜி வரைந்த அந்த நிமிஷச் சித்திரங்கள் பென்சிலால் வரையப் பட்டவை. வரைந்த ஆண்டு 1955. இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகும் அந்தப் பென்சில் சித்திரங்கள் தத்ரூபமாகக் கயிலைக் குருமணி அவர்களையும் தம்பிரான்களையும் வரை படங்களிலே நம் முன் காட்டி நிற்கின்றன. என்றாலும் பென்சில் படத்தை அப்படியே அச்சிலே போட்டுக் காட்டுவதற்கு முடியுமா? ஓரளவு முயன்றுள்ளோம். இதோ பாருங்கள்!




இஸ்லாம்
கோமெய்னி


இந்திராவோடு சேரமாட்டேன்னு எழுதி கையெழுத்து வாங்கிடுவோம்!
யாரைப் பார்த்து, இப்படி பேசறீங்க?
அவராவது.. போவதாவது.. தப்பா!
நீங்க (இ) காங்கிரசுக்குப் போகமாட்டீங்கன்னு நான் சத்தியம் பண்ணத் தயார்!
சந்தேகம் என்ன நாம கழுத்தைப் பிடிச்சுத் தள்ளினாலும் போகமாட்டார்!
பெட்டி படுக்கை உள்ளே வெச்சுட்டேன்!


கப்பலைக் கவிழ்க்காம விடமாட்டேன்!... கப்பலைக் கவிழ்க்காம விடமாட்டேன்!




# கல்கி

1979 டிசம்பர் 9

சித்தார்த்தி கார்த்திகை 23

மலர்: 38 இதழ்: 19





தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்


# என்று காண்போம் இனி?

"இன்று ராஜாஜியின் பிறந்த நாள்'' என்றார் மகாத்மா. எல்லோரும் அவரைத் திரும்பிப் பார்த்தார்கள். ''தேசத்துக்குச் சுதந்திரம் வாங்கித் தந்ததாகப் பாரத மக்கள் என்னைப் போற்றுகிறார்கள். ஆனால் அந்தப் போராட்டத்தின் போது எனக்குப் பக்க பலமாக இருந்தது மட்டுமல்லாது, அதற்கு அடுத்த கட்டமாக ஏக கட்சி ஆட்சியிலிருந்தும் தேசமக்களுக்கு விடுதலை பெற்றுத் தந்தவர் ஸி. ஆர் தானே!'' என்றார் அண்ணல். ''எனது பணியைவிட ஸி. ஆரின் சாதனை பெரிதல்லவா!''

''வாஸ்தவம்தான்'' என்றார் வியாசர். ''வேத தத்துவங்களை யெல்லாம் உள்ளடக்கி நான் பாரதம் எழுதினேன். ஆனால் அதனை எளிய தமிழிலும் இலகுவான ஆங்கிலத்திலும் எழுதி உலகமெல்லாம் பரப்பியது அதை விடச் சிறந்த காரியமல்லவா!''

''காந்திஜியை நாங்கள் யாருமே புரிந்து கொள்வதற்கு முன்னால், அவர் தென்னாப்பிரிக்காவில் இருந்தபோதே அவர் சிறப்பையும் அவர் கூறிய ஆன்ம சக்தியின் மேன்மையையும் உணர்ந்து, காந்திய வழியிலே தமிழகத்தைப் பண்படுத்த ஆரம்பித்து விட்டவர் ஸி. ஆர். அவரைக் காட்டிலும் சிறந்த காந்தியச் செம்மல் யாருண்டு?'' என்றார் ஜெயப்பிரகாசர்.

''எதிர்ப்புப் பணியாற்றுவதிலும் சிறப்புண்டு எனில் நான் கூடத்தான் கோஷம் போட்டு அலைக்கரங்களால் பூவுலகை அல்லும் பகலும் அனவரதமும் தாக்கி வருகிறேன்! என்ன பயன்?'' என்று சிரித்தார் சமுத்திரராஜன். ''எதிர்ப்பு ஆக்க பூர்வமானதாக, மாற்றுக் கருத்துக்கள், யோசனைகளை உள்ளடக்கியதாக அமைய வேண்டும் என்று கற்றுத் தந்தவர் ராஜாஜிதான்!''

''ஸி. ஆர். தமிழகத்தில் பதவியிலிருந்தபோது ராமராஜ்யம் நடந்ததாகக் கூறுகிறார்கள். ஆனால் என்னால் கூடப் போரிட்டு அழிக்க முடியாத மது அரக்கனை வென்றவர் அவர்தான்'' என்று கூறி மெய் சிலிர்த்தார் ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி.

''ஒழுக்க சீலர், சத்திய சீலர்'' என்று பரவசமுற்றுச் சொன்னார் தருமர். ''நான் கூடத் தகாத முறையில் சூதாடினேன். பாரதப் போரின்போது சத்தியம் தவறி விட்டேன். ஆனால் ஸி. ஆர்! அப்பழுக்கு கூற முடியுமா அவரைப் பற்றி? தன்னலமின்றி விளங்கியதோடு தமக்கு நெருங்கிய பந்துக்கள், நண்பர்களுக்காகக் கூட ஒரு சிறு சலுகையும் காட்ட மாட்டாரே!

''கருணையே வடிவானவர்'' என்றார் புத்தர். ''அவரது அன்புப் பார்வை என்னுடையதைவிட விசாலமானது. உலக நாடுகள் அனைத்தையும் வியாபித்தது. இல்லாமலா 'அணு ஆயுதப் பரிசோதனைகள் வேண்டாம்' என்ற அறிவுரையுடன் தள்ளாத வயதிலும் அமெரிக்கா சென்றார்!''

''ரௌலட் சட்டத்தை எதிர்த்த நாளிலிருந்து தி.மு.க. ஆட்சியை ஏற்படுத்திய நாள் வரை அவரது ராஜ தந்திரம் எப்படியெல்லாம் செயல்பட்டிருக்கிறது! அர்த்த சாத்திரம் ஒன்றல்ல, ஒன்பது எழுதலாமே அவற்றை வைத்து!'' என்று வியந்தார் சாணக்கியர்.

''கடமை வீரர், ஸ்திதப் பிரக்ஞர்'' என்று கனிவுடன் மொழிந்தார் கண்ணபிரான். ''எனது கீதைக்கு விளக்க வுரையாயிற்று அவர் வாழ்க்கை!''

''பதவியில் மட்டுமின்றி எதிலுமே பற்றற்றவர். தியாகத் திரு உருவம். எளிமைக்கும் அடக்கத்துக்கும் எடுத்துக் காட்டானவர்'' என்றார் வசிஷ்டர். ''அவரை பிரும்மரிஷி என்று போற்றி மகிழ ஆவலாய் இருக்கிறேன்!''

''எங்கே அந்தப் பேரறிவாளர்! அழைத்து வாருங்கள், வாழ்த்துவோம்!'' என்றார் ஸோக்ரதர்.

''அவர் பிறந்த நாள் கொண்டாடிக் கொள்கிற மன நிலையில் இல்லை. இன்றைய பாரதத்தை எண்ணி வருந்திக் கொண்டிருக்கிறார்'' என்றாள் பாரதமாதா.




இரவு முழுவதும் கனத்திருந்த வானம் காலையில் கறுத்து ஊசி முனையெடுத்த சிறு தூறல்களை நிலமகள் மீது தூவி விளையாடிக் கொண்டிருக்கின்ற விடியல் பொழுது...

'நெஸ்' பாட்டிலையும், சர்க்கரை டப்பாவையும் மேஜை மீது வைத்து விட்டு, 'மில்க்' குக்கரின் விசிலோசைக்குக் காத்திருக்கும் போது, வாசற் கதவில், யாரோ விரல் கொண்டு எழுப்பும் ஓசை மெலிந்து கேட்கிறது.

''யெஸ்...கம்...இன்...''

''மிஸ்டர்...மது...?''

''நான்தான்....''

வந்தவன் இளைஞன். வெண்ணிலவு நிற வேஷ்டி. சிலாக். படிய வாரிய கேசம். சென்னையின் நாகரிகக் கோலங்களுக்கு அப்பாற்பட்ட புனிதப் பிறவித் தோற்றம். அத்தோற்றத்தின் நடுவே செல்வச் செழிப்பின் மின்னலடிப்பு. எனக்கு முன்னறிமுகமற்ற முகம்.

''யார் நீங்கள்...?''

''என் பேரு சங்கரன். சொந்த ஊர் திருநெல்வேலி. இங்கே மெட்ராசிலே பிசினஸ் பண்றேன்.... வருஷம் இரண்டு லட்ச ரூபாய் லாபம். போன மாசம்தான் எனக்குக் கல்யாணம் ஆச்சு. நான் எஸ். எஸ். எல்.சி. வரைதான் படிச்சிருக்கேன். ஆனா எனக்கு பி.ஏ. வரை படிச்ச பெண்ணைக் கல்யாணம் பண்ணி வைச்சுட்டாங்க... பொண்டாட்டி நம்பளை விட அதிகமா படிச்சிருக்காளேன்னு நான் கவலைப்படலே.''

அவனுடைய நீண்ட முன்னுரைக்கும் எனக்கும் என்ன சம்பந்தம் என்ற வினாக் குறி முகச் சுளிப்பாக மாறியதை உணர்ந்த அவன்....

''சொல்லவே மறந்துட்டேனே... என் பெண்டாட்டி பேரு மங்கையர்க்கரசி...''

வார்த்தைகளைச் சுண்டி விட்டுவிட்டு அவன் என் விழிகளை நேருக்கு நேர் பார்க்கிறான். அவனை நேருக்கு நேர் சந்திக்க இயலாதவனாய் நான் முகத்தைத் திருப்பிக் கொள்ளும்போது மில்க் குக்கர் விசில் அடிக்கிறது!

அவன் மங்கையின் கணவன்.

என் இதயப் பூங்காவில் மலர்ந்திருந்த அந்த ஒற்றை ரோஜாவைப் பணம் என்னும் ஏணி மீதிருந்து பறித்துக் கொண்டவன்.

''ப்ளீஸ்.... பீ... ஸிட்டெட்....''

நாற்காலியைச் சுட்டிக் காட்டிவிட்டு, ஸ்டவ்விலிருந்து பாலை இறக்கி, இரண்டு கோப்பை காப்பி கலக்கி ஒரு கோப்பையை அவன் முன்னால் வைக்கிறேன்.

அவன் முன்னே 'மோடா' ஒன்றில் அமர்ந்து காப்பியை நான் உறிஞ்சி வயிற்றுக்குள் நழுவ விடும்போது...

''ஸார்...! எனக்கு எதையுமே மறைச்சு வாழுகிற வாழ்க்கை பிடிக்காது. எல்லாமே சுத்தமா இருக்கணும்னு சின்ன வயசிலேயிருந்தே ஒரு பிடிவாதம். அதை இப்போ மாத்திக்க முடியலே....''

''புரியும்படியா சொல்லலாமே?''

''ஸார்! நீங்க படிச்சவங்க. என் பொண்டாட்டியும் படிச்சவ. மங்கை எனக்குக் கழுத்தை நீட்டறதுக்கு முன்னாடி உங்களுக்கு மனசைக் கொடுத்திருந்தாள் என்று எனக்குத் தெரியாது....''

''தெரிந்திருந்தால்....''

''நிச்சயமா அவளை நான் கல்யாணம் பண்ணி யிருக்க மாட்டேன்.''

''இப்போ எப்படித் தெரிந்தது?''

''மங்கையே சொன்னாள்.''

''இஸ் இட்?''

''ஆமாம் ஸார்! நீங்க ரெண்டு பேரும் உயிருக்கு உயிராக் காதலிச்சதைச் சொன்னா. கன்னிமாரா லைப்ரரிக்குப் பின்னாலே உள்ள மர நிழலில் மணிக்கணக்கா உட்கார்ந்திருந்ததைச் சொன்னா! எனக்குச் சுற்றி வளைத்துப் பேசத் தெரியாதுங்க. அதனாலே வெளிப்படையாகவே சொல்கிறேன். எனக்கு உடலால் மட்டும் கிடைத்துக் கொண்டிருக்கும் மங்கை உள்ளத்தாலும் கிடைக்க வேண்டும்....''



## அடுத்த BLOW UP ஷோபா

அவன் ஆழ் மனத்துக் கவலைகளைப் பிரதிபலிக்கின்ற சொற்களாக நீரேடுகள் அவன் விழிப் படலத்தின் மீது படரத் தொடங்குகின்றன.

''மிஸ்டர், சங்கரன்...! கல் வெட்டுகளாய் நிலைத்துவிட்ட அவள் நினைவுகளைக் கரம் கொண்டு அழித்துக் கொண்டிருக்கிற என்னிடம் போய்....''

''ஸார்.... ஒருத்தி அல்லது ஒரு பொருள் ஒருவனுக்குக் கிடைக்காம இன்னொருவனுக்குக் கிடைக்கிறப்போ அந்த இரண்டு பேருக்கும் இடையிலே ஒரு போராட்டம் நடந்தா அதுலே சேதப்படுவது அந்த ரெண்டு பேரும் இல்லீங்க. அந்தப் பொண்ணு இல்லே, அந்தப் பொருள் .... அதுதான் சேதப்படும். இந்த ஒரு பாயிண்டை மட்டும் ஞாபகத்திலே வைச்சுக்கிட்டீங்கன்னு என் வேண்டுகோளை மறுக்க உங்களுக்கு மனசு வராது.''

வெளிப்படையான அவனது எண்ணங்கள் குன்றிலிட்ட விளக்காகப் பின்னிவிடும்போது அவ்வெண்ணங்களில் அடங்கிய முற்போக்கு நோக்கு என் சிந்தனையைத் துருவித் துருவி எடுக்க.....

''எஸ் மிஸ்டர் சங்கரன்.... நீங்க விரும்பியபடி அவள் மனத்தையும் உங்கள் பக்கம் திருப்ப என்னால் இயன்றவரை முயற்சி செய்கிறேன். பட் ஒன் திங். நான் மறுபடியும் மங்கையைச் சந்தித்தாக வேண்டும். நீங்கள் என்னைச் சந்தேகப்பட மாட்டீங்களே....''

''ஸார்... ஒரு புருஷனுக்குப் பெண்டாட்டி மேலே என்ன சந்தேகம் வேண்டுமானாலும் வரலாம். ஆனா அவ தேகத்து மேலே மட்டும் சந்தேகம் வரக் கூடாது. மங்கையை எத்தனை தடவை வேண்டுமானாலும் நீங்கள் சந்தியுங்கள். நான் அவளை நம்புகிறேன். உங்களையும் நம்புகிறேன். தாம்பத்தியத்திலே நம்பிக்கைதானே முதல் படி? நீங்க மங்கையைச் சந்திக்க வரும்போது பங்களாவிலே நான் இருக்க மாட்டேன்: காலையிலே எட்டு மணிக்குக் கடைக்குப் போய்க் கல்லாவிலே உட்கார்ந்தேன்னு இராத்திரி பத்து மணிக்குத்தான் வீடு திரும்புவேன்.''

''உங்கள் மனப் பக்குவத்தைப் பாராட்டுகிறேன். நாளைக்கே மங்கையை நான் சந்திக்கிறேன். பை த பை... உங்கள் விலாசம்?''

''நம்பர் 225, கீழ்பாக்கம் தோட்டம்.''

**ம**று நாள்:

அமைதியை மணந்து கொண்டாலும், ஆர்ப்பாட்டமாக நிற்கும் பங்களாக்களின் வரிசையில் '225' இலக்கத்தைக் கண்டு பிடிக்கக் கஷ்டப்படவில்லை. 'குரூப் டான்ஸில்' தனித்து நிற்கும் கதாநாயகியைப் போல, மற்ற பங்களாக்களை விட்டு விலகி, காம்பவுண்டுச் சுவரை எட்டி ஒதுக்கி வைத்துப் பரந்த நிலப் பரப்பின் முன்புறத்தில் பசுமையை வளரவிட்டு, ஓர் ஓரத்தில் கப்பலாக ஒதுங்கிக் கிடந்தது அவள் பங்களா. உப்பு — புளி — மிளகு வத்தலில் இவ்வளவு பணமா? வியக்கிறேன்.

காலிங் பெல்லில் விரலைப் பதிக்கிறேன். மணி ஒலிக்கிறது. ஒன்று... இரண்டு... ஐந்து நிமிடங்கள். எவ்வித காலடி ஓசையும் பங்களாவின் உள்ளே யிருந்து வெளிவரக் காணோம். குபீரென்று வந்த காற்றுக் குவியல் முன் கதவு முந்தானையை நீக்குகிறது.

ஒருவேளை மங்கை குளித்துக் கொண்டிருப்பாளோ....? அல்லது உறங்கிக்கொண்டிருப்பாளோ....?

காற்று சிறிது திறந்த கதவை மேலும் திறந்துகொண்டு உள்ளே நுழைகிறேன்.

முன் ஹாலில் சோம்பேறித்தனமாகக் கிடக்கும் சோபாக்கள். ஜன்னல் வழியே வழியும் காற்றில் அடித்துக் கொண்டிருக்கும் தினப் பத்திரிகை.

முன்னேறுகிறேன்.

நடு ஹால். என் கணிப்பு வீண் போகவில்லை. ஹாலின் ஓரத்திலிருந்து ஏர் கூலர் தாலாட்டிக் கொண்டிருக்க ஓரடி உயர மெத்தை விரிப்பின் மேல் மங்கை அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறாள். அவள் நெஞ்சின் மீது டால்ஸ்டாயின் ''வார் அண்ட் பீஸ்'' 'பெங்குவின் எடிஷன்' கவிழ்ந்து கிடக்கிறது. அவள் முகத்தைப் பார்க்கிறேன். நிரம்பி நின்றும் ததும்பி வழியாப் புன்னகையின் கீற்றுக்களை அளவோடு வெளியிடும் அந்த ஆரஞ்சு அதரங்கள்... தூக்கத்தில் கூட அவள் எவ்வளவு... நோ...நோ...; அவள் இன்னொருவனின் மனைவி....

மனச்சாட்சியின் உறுத்தலுடன்....

'மங்கை.... மங்கை.....'

அழைக்கிறேன். நாத்தடுமாற அழைக்கிறேன். அவள் விழி இமைகள் பிரிவதாகக் காணோம். ஒருவித நடுக்கம் உடலெங்கும் பரவுகிறது.

---

மாமேதை மணிமொழி :



### பண்பாட்டின் சீர்குலைவு!

ஏழைமை அல்ல ஒரு நாட்டைக் கம்யூனிசத்தை நோக்கி இட்டுச் செல்வது, தலைமுறை தலைமுறையாக வந்த பண்பாடுகளின் சீர்குலைவு தான் அந்தப் பாதையை நோக்கி இட்டுச் செல்கிறது.



அவன் : அவங்க இரண்டு பேரும் ஒற்றுமையாய் இருப்பதைப் போல வேறு யாரும் கிடையாது.

இவன் : அப்படியா?

அவன் : ஆமாம்: அவருக்கு ஜலதோஷம் பிடிச்சிருந்தா இவரு தும்முவாருன்னு பார்த்துக்கோயேன்.

— ஆர்: கோபாலகிருஷ்ணன்

---

மை காட்... வாட்... ஹெவ் ஹெப் பண்ட்.... இரத்தம்.... உறைந்தும் உறையாத குருதித் திரட்டு.... நெஞ்சுக்கு நேரே சுடப்பட்டிருக்கிறாள். என்னுடைய கவிதை மலர் கருகிக் கிடக்கிறது....

இரத்த ஓட்டமே நின்று போகின்ற அதிர்ச்சியைத் தாங்க முடியாது நிற்கும்போது முன் பக்கக் கதவு தாழிடப்படும் ஓசை...

கதவை நோக்கித் திரும்புகிறேன்.

''வெல் கம் மிஸ்டர் மது....'' விழிகளில் வழியும் குரூரத்துடன் — விரலினுள் பிஸ்டலைச் சுழற்றிக் கொண்டு நிற்கிறான் சங்கரன்.

''சங்கரன்.... நீ..... நீயா....?''

''யெஸ்.... நானேதான்.... உன்னுடைய நேற்றைய காதலியின் இன்றைய கணவன். இன்று காலையில் உன்னைச் சந்தித்த உப்பு — புளி — மிளகு வத்தல் வியாபாரி சங்கரன்...''

''மங்கையை அநியாயமாக் கொன்னுட்டயேடா பாவி....''

''நோ....நெவர்.... நியாயத்துக்கும் அநியாயத்துக்கும் வித்தியாசம் தெரியாதவன் நான் இல்லே.... நான் ஒரு பி. ஏ. லிட்ரேச்சர்.... மங்கையைக் கொன்றதற்கு எனக்குக் காரணம் இருக்கிறது. உள்ளத்தை ஒருவனிடம் பறிகொடுத்துவிட்டு, உடலை இன்னொருவனுக்குத் தரும் ஒருத்தியை மனைவி என்று என்னால் பார்க்க முடியவில்லை. மிஸ்டர் மது... ஹேண்ட்ஸ் அப் ப்ளீஸ்.... உன்னையும் கொல்வதற்கு முன்னாலே சில கேள்விகள். அதற்கான பதில்களை உன்னிடம் எதிர்பார்க்கிறேன்.... நாட் ப்ரம் யுவர் லிப்ஸ்.... பட் ப்ரம் யுவர் ஹார்ட்....''

துப்பாக்கிக் குதிரையின் மீது ஏற்றி நிற்கும் அவன் ஆள்காட்டி விரலையே நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

''மிஸ்டர் மது.... நேற்றுத்தான் மங்கையின் பழைய டைரியைப் படிச்சுப் பார்த்தேன். கடற்கரையில் மங்கை உன் மடிமீது சாயும்போதெல்லாம் 'வீணையடி நீ எனக்கு மேவும் விரல் நானுனக்குன்னு நீ முணுமுணுப்பாயாமே... அந்த வரிகளை எழுதின அதே பாரதி காதல்....காதல்.... காதல்.... காதல் போயின் சாதல்....சாதல் சாதல்னு பாடியிருக்கான் தெரியுமோ... உங்கள் காதல் போச்சு.... அதுனாலே இனிமே சாதல்.....சாதல்...சாதல்.... ஒரு சாதல் முடிஞ்சாச்சு.... இரண்டாவது சாதல்....''

''ப்ளீஸ்....சங்கரன் சுட்டுவிடாதே....''

''ஹ....ஹ..... என்ன சொன்னே... சுடாதேன்னு சொல்றியா.... மிஸ்டர் மது... நீ கடைசி முறையா மங்கைக்கு எழுதின கடிதத்திலே ' நான் உன்னுடன் மரணத்தைத் தழுவத் தயார். ஆனால் நீ இல்லாமல் என்னால் வாழ முடியாது'ன்னு எழுதியிருந்தியே....அதுக்கு என்ன அர்த்தம்....?''

''.........''

''லீவ் இட்.... உனக்கும் மங்கைக்கும் இடையிலிருந்த உறவு....''

''அது தெய்வீக உறவு....''

''ரப்பிஷ்.... எதுடா தெய்வீக உறவு? தெய்விகம்னு சந்நிதானத்துக்கு வர வேண்டிய உறவுடா.... ஆனா உங்க உறவு? காதலிக்க ஆரம்பிச்சதுமே உடைஞ்ச படகு இடுக்குகளில்.... உட்லாண்ட்ஸ் ஓட்டலின் மறைவுகளில் — ப்ளூ டயமண்டின் அரை இருட்டு முழுக் குளிரில் உடம்போடு உடம்பு உரசிக் கொள்வதா தெய்வீக உறவு.... டேய் உங்களுக்கெல்லாம் காதல் என்பது வெறும் மாமிசத்தோட மாமிசம் உராயும் என்.வி. மெனு கார்ட்.... பிளிகல் தர்ஸ்ட்.....இம்மாறல் லஸ்ட்.... லீவ் இட்.... எனக்கு மங்கையை மணம் முடிக்கும்போது அதைத் தடுத்து நீ ஏன் நிறுத்தவில்லை?''

''விதி சதி செய்து விட்டது.''

''பலே... ஆதாம் ஏவாள் காலத்திலிருந்து வரும் அதே ஸ்டீரியோ டைப் பதில்... மாமிச உறவுக்குச் சதிசெய்யாத விதி மணமேடைக்கு வரும்போது மட்டும் சதி செய்கிறதோ...: டேய்.... காதலி இன்னொருவனைக் கைப்பிடிச்ச பிறகு நாலு நாட்கள் 'ஷேவ்' பண்ணாம இரங்கற்பா எழுதி முடிச்சுட்டா நீ அவள் மேனியில் தொட்ட இடமெல்லாம் புனிதமாயிடாதுடா....''

''அதிகமாகப் பேசாதே. மங்கையை இப்போதுகூட நான் ஏற்றுக் கொள்ளத் தயார்.''

''பேஷ்.... வெரி குட்.... மிஸ்டர் மது! நீங்க ஒரு புரட்சிக் காதலர்...இப்போ சொன்னீங்களே இந்த வார்த்தை எனக்காக ''மாங்கல்யம் தந்துதானே....''ன்னு முழங்கிய மந்திரத்துக்கு முன்னாடி கல்யாணச் சத்திரத்திலே ஒலித்திருக்க வேண்டும்.... இப்போ டூ லேட்.... மங்கை இஸ் டெட்...' அவள் உயிரோடு இருந்தாக்கூட நான் உன்னிடம் அவளை அனுப்ப மாட்டேன். உன்னுடைய கோழைத்தனம் வீரமாக மாறும்போது, 'இவன் கட்டின பெண்டாட்டி மூணாவது நாளே இன்னொருவனுடன் ஓடிவிட்டாள்' என்ற அவப் பெயரை எனக்கு நானே சம்பாதித்துக் கொள்ள விரும்பவில்லை..... ஃபைனலி.... இரண்டாவது சாதல்.....

என் நெற்றிப் பொட்டில் குண்டு பா...ய்...கி...ற...து....

---

மாமேதை மணிமொழி:



## எது ஜனநாயகம்?

பலம் வாய்ந்த அரசாங்கமும் அதற்குப் பணிந்து நடக்கும் மக்களும் கொண்ட நாடு ஒரு நல்ல நாடாகலாம். ஆனால் செவிட்டு அரசாங்கமும் ஊமைமக்களும் கொண்ட ஜனநாயகம் ஜனநாயக மல்ல.

# கல்கி கனவு காண்கிறது!

## கலைஞர் மு. கருணாநிதி

கப்பல் பேர ஊழலைச் சொன்னால் கண்ணப்பனைப் பற்றி நாயுடு கமிஷன் என் கூறியிருக்கிறது தெரியாதா? மாதவனைப் பற்றி நாயுடு கமிஷன் என்ன கூறியிருக்கிறது தெரியாதா? என்று கல்கியார் வரிந்து கட்டிக் கொண்டு வருகிறார். நாம் என்னவோ கல்கியாரின் ஊழல்களைப் பற்றிச் சொன்னது போல கண்கள் சிவக்கக் கோபம் கொப்பளிக்க அவர், கொக்கரிப்பதன் ரகசியம்தான் நமக்குப் புரியவில்லை.

மாதவன் இன்று தி.மு.க.வில் இல்லை! நாயுடு கமிஷன் அறிக்கையை மறுத்து அவர் ஒரு விளக்கமளித்து அறிக்கை விடுத்து அதுவும் ஏடுகளில் வெளி வந்துள்ளது.

கல்கியார் குறிப்பிடுகிற சர்க்காரியா கமிஷன் நண்பர்கள் பெரும்பாலோர் இன்றைக்குக்கல்கியாரின் கடவுளான எம்.ஜி.ஆர். பக்கம் தான் இருக்கிறார்கள். நித்தநித்தம் லஞ்சம் வாங்குகிற சத்தியவாணிமுத்து என்று எம்.ஜி.ஆர். ஜனாதிபதிக்குத் தந்த புகாரில் சிறப்பிக்கப்பட்ட அந்த அம்மையார் இன்று மத்திய அரசின் காபந்து சர்க்காரில் ஒரு அமைச்சர்! ஆம், கல்கியார் அடிதொழுது வணங்குகின்ற எம்.ஜி.ஆர். கட்சியின் அமைச்சர்!

இன்னும் யார்? யார்? அந்தப் பட்டியல் கல்கி யாருக்கே தெரியும்!

கண்ணப்பனைப் பற்றி நாயுடு கமிஷன் ஏதோ எழுதி விட்டதாம்! அதைத் தூக்கி வைத்துக் கொண்டு— இப்போது எம். ஜி. ஆர். மீது ஆதாரங்களுடன் சாட்டப்பட்ட குற்றங்களை மறைத்து விடலாமென்று கல்கி கனவு காண்கிறது!

இந்த ஆட்சியின் மீது ''லஞ்சம் ஊழல்'' என்று நான் அலறுகிறேனாம்! கல்கியார், பாவம்—அழுகிறார்!

கண்ணப்பனைப் பற்றி நாயுடு கமிஷன் தெரிவித்த கருத்துக்களை வைத்து எம்.ஜி. ஆரின்—பயங்கர ஊழல்களை — பல்கேரியக் கப்பல் ஊழல்களை — பஸ் முதலாளிகளிடம் லஞ்சம் பெற்ற ஊழல்களை — மருத்துவக் கல்லூரிப் பட்டியல் ஊழல்களை — மணியன் கோட்டா ஊழல்களை — மறைத்து விடலாமென்று மனப்பால் குடிக்கும் கல்கியார், கண்ணப்பன் விடுத்துள்ள அறிக்கை நவம்பர் முதல் தேதியே ஏடுகளில் வெளி வந்துள்ளதைப் படித்துப் பார்க்கட்டும்.

அதைப் படித்துப் பார்த்த பிறகும் கல்கியார் தன் முகத்தில் பூசப்பட்ட கரியை மாற்றார் முகத்தில் பூச முனைவாரேயானால் மக்கள் சிரிக்கத் தொடங்குவார்கள். (கல்கியார் எழுதியதைத்தான் திரும்ப எழுதியிருக்கிறேன்.) அப்படி மக்கள் சிரிப்பதை — ராஜாஜி அவர்களே திடீரெனத் தோன்றினால் கூட நிறுத்த முடியாது!

கல்கியார் அவர்களே! கழகத்தின் மீதும் என் மீதும் உங்களுக்குள்ள எரிச்சலின்



காரணம் புரிகிறது — அதற்காக 'கல்கி' ஏட்டுக்கு நீண்ட நாட்களாக இருந்து வருகிற —கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்களால் கடைப் பிடிக்கப்பட்ட — நல்ல மரபுகளை ராசமாக்கி விடாதீர்கள் என்று மட்டும் கூறிக் கொள்கிற கடமை எனக்கு உண்டு!

உடன்பிறப்பே! கழக விரோத ஏடுகளின் வரிசையில் கல்கியும் தன்னைச் சேர்த்துக் கொள்ள முனைகிறது, அவ்வளவுதான்!

முரசொலி
24—11—79

---

மாமேதை மணிமொழி :

### கசப்பு

''வெள்ளரிக்காய் கசக்கிறதா? எறிந்து விடு. வழியில் முள்ளா? அவ்வழியை விட்டுத் தள்ளிப்போ. போதும். இப்படி கசக்கும் காய் ஏன் இருக்கிறது? முள் எதற்காக உலகில் தோன்றியது? என்று கேள்விகள் கேட்காதே! மரத்தச்சு அல்லது தோல் பட்டறையில் போய் ஒருவன் இங்கே எதற்காக இவ்வளவு குப்பையும், உபயோகமற்ற துண்டுகளும் சிலல்களும்? என்று சொன்னால் பிரகிருதியின் உண்மை தெரிந்தவர்கள் சிரிப்பார்கள் அல்லவா? உலகத்துக் குப்பையைப் போட, உலகத்தைத் தவிர்த்து வேறு இடமில்லை.''

—ராஜாஜி -தமிழில் தந்த 'மார்க்க அரேலியரின்' -ஆத்ம சிந்தனை நூலிலிருந்து...

—தகவல் : செந்தமிழ்ச்செல்வன்



## முற்றுப் பெறாத வாக்கியங்கள்...

மதஜ மிருத்யுஞ்சயன்

### அத்தியாயம் 6

**வி**னோத்திடமிருந்து போன் கால் வரும் என்று மாலை ஐந்து மணி வரை எதிர்பார்த்திருந்த அருணுக்கு ஏமாற்றம்.

'செவன் ஹெவனி'லிருந்து வெளிவந்து ஓர் ஆட்டோவைப் பிடித்து 'மல்லேஸ்வரம் ஹோகப்பா' என்றான். அவனுடைய தாய் மொழியே கன்னடம் என்பதால் பெங்களூர் வாசம் தாய்வீடு போல இருந்தது.

ஆட்டோ ஓடிக் கொண்டிருந்தது.

'வினோத், மாமா வீட்டில் இருந்தால் சரி. இல்லாவிட்டால் என்ன செய்யலாம்' என்று அவனுள் யோசனை. 'நீல் கமல் வீட்டுக்குப் போய்ப் பார்க்கலாமா?... வினோத் தப்பாக எடுத்துக்கொள்வாரோ என்னவோ? சான்ஸ் கிடைத்தால் நீல் கமலுடன் ஒரு சினிமா போகலாம்.... பாக்ஸ்லே போகலாம்... மெட்ராஸ்லே சபையர் தியேட்டரிலே இருக்கிற மாதிரி இங்கே பாக்ஸ் இருக்கான்னு விசாரிக்கணும்.... சீச்சீ புத்தி ஏன் இப்படிப் போகிறது.....'

மல்லேஸ்வரம் ஐந்தாவது கிராஸில் வண்டியை நிறுத்தினதும் அருண் இறங்கிப் பணத்தைக் கொடுத்தான்.

சிகரெட் பற்ற வைத்துக் கொள்ளலாம் என்று ஒரு கடைக்குப் போனபோதுதான் அந்த சம்பாஷணை அவன் காதில் விழுந்தது.

ஒரு பெரியவர் பக்கத்திலிருந்தவரிடம் ஆற்றாமைப்பட்டுக்கொண்டார் :

'ஏனு அநியாயப்பா இது ஹட்ட ஹகல்லி! ரெடு கொலேயந்தே வக்சர் வியாபாரி ரங்கூன் ராமையானுவனு அவன் டிரைவர்னனு கொலே மாடிவிட்டு ஓடி ஹோதரந்தே! போலீஸ் டிபார்ட்மெண்ட் ஏனு மாடுதித்தாரே எந்தே கொத்தில்லா!' கன்னடத்தில் நிரு மாதிரி கூறினதும் புரிந்து கொண்டு ஆடிப்போனான் அருண்.

'அட பாவிங்களா! ரங்கூன் ராமையாவையும், டிரைவரையும் கொலை பண்ணிட்டு வைரத்தைத் திருடிட்டிங்களா?'

விஷயத்தை வினோத்திடம் சொல்லலாம் என்று அவன் மாமா வீட்டுக்கு விரைந்தான்.

''வினோத் கார்த்தாலே போனவன்தான். இன்னும் வரலியே?'' என்றாள் அவனுடைய மாமி.

அருண் உள்ளத்தில் இனம் புரியாத அச்சம் புகுந்தது!

**'பர்தா'** அணிந்த முஸ்லிம் பெண்மணி தன்னிடம் முதலில் பேச்சுக் கொடுத்து வழி விசாரித்தபோது வினோத் அதனைச் சாதாரணமாக எடுத்துக் கொண்டான்.

ஆனால் திடீரென்று அவள் ஓர் ஆட்டோ ரிக்ஷாவைக் கூப்பிட்டு நிறுத்தி, 'பசவங்குடி போக வேண்டும். துணைக்கு வருகிறீர்களா?' என்று கேட்டபோதுதான் வினோத் விழித்துக் கொண்டான்.

'இதில் ஏதோ சூதிருக்கிறது! எதிரிகள் நம்மிடம் விளையாடுகின்றனர்' என்று அவனுக்குப் புரிந்தது.

ஒரு கண நேரத்துக்குள் அவனுடைய உள்ளத்தில் தர்க்க வாதங்கள்.

'அவளை நம்புவது போல் கூடப் போய் முடிந்தவரை துப்பு சேகரித்துக் கொண்டு, மாட்டிக் கொள்ளாமல் தப்பி விடலாம்' என்று ஒரு யோசனை. அதே சமயம், 'தப்பி வர முடியாதபடி அவர்கள் மடக்கி விட்டால் உயிருக்கும் ஆபத்து, காரியமும் கெட்டுவிடும்' என்று மாற்றுச் சிந்தனை!

உடனடியாக முடிவுக்கு வந்தான்.

பட்டப் பகல். ஆட்டோவில்தான் கூப்பிடுகிறாள். என்ன செய்துவிட முடியும்? நிலைமை கைக்கு அடங்காமல் போய்விடும் என்று புரிந்தால் குரலெழுப்பிக் கலாட்டா செய்தோ, அல்லது தந்திரமாக வேறு ஏதாவது செய்தோ தப்பிவிடலாம்... இந்தச் சந்தர்ப்பத்தை விட வேண்டாம் என்று முடிவெடுத்தவனாக ஆட்டோவில் ஏறிக்கொண்டான்.

'பசவங்குடி சலோ பாய்!' என்றாள் அப்பெண். வண்டி விரையலாயிற்று.

''என்ன வினோத்! என்னை இன்னும் அடையாளம் தெரியவில்லையா?'' என்று இவனுக்கு மிக அருகில் முகத்தைத் திருப்பி அவனுக்கு மட்டுமே கேட்கும்படி 'பர்தா' கேட்டதும் சஸ்பென்ஸ் உடைந்தது.

நீல் கமல்தான்!

முன்பு பேசிய குரலிலிருந்து மாறுபட்டு இயல் குரலில் பேசினாள்.

''என்ன நீல்... எதுக்காக இந்த வேஷம்?'' அவனும் டிரைவர் காதில் விழாதபடி மெதுவாக அவளிடம் கேட்டான்.

''ஷ்ஷ்...இப்போ நாம்ப எதையும் பேச வேண்டாம். பசவங்குடியிலே என் பிரண்ட் ரூமுக்குப் போய்ப் பேசலாம். விவரமாகச் சொல்கிறேன்.''

தன்னால்கூடப் புரிந்து கொள்ள முடியாமல் அவள் தன் குரலைச் சாமர்த்தியமாக மாற்றிப் பேசியது வினோத்தை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது.

'இவள் எதற்காக வேஷம் போட்டுக் கொண்டு வந்திருக்கிறாள்' என்ற கேள்வி அவனை ஆக்கிரமித்தது. 'பொறுத்துப் பார்க்கலாம்' என்று தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

வண்டி ஓடிக் கொண்டிருந்தது.

தாராளமாக உட்கார இடம் இருந்தும் வினோத்தின் மடியில் உட்காராத குறையாக மிக மிக அருகில் நெருங்கி உரசிக் கொண்டு உட்கார்ந்திருந்தாள் நீல் கமல். அவளுடைய வலது கன்னப் பகுதி அவனது இடது புஜத்தில் அழுந்திக் கிடந்தது. மேலே துணி மூடியிருந்தாலும் கன்னத்தின் மிருதுவும் செழுமையும் அவனுள் ஒருவித கிளர்ப்பைத் தோற்றுவித்தன.

'தள்ளி உட்கார்' என்று அவனால் சொல்ல முடியவில்லை. அதே சமயம் அவளுடைய அங்கங்களின் உரசலால் கிளர்ந்தெழும் உணர்ச்சியினைச் சாதாரணமாகத் தள்ளி விடவும் முடியவில்லை அவனால்!

'எப்படிப்பட்ட நெஞ்சுரத்தையும் கொண்ட ஓர் ஆணை, ஒரு பெண் தனது ஸ்பரிசத்தால் கரைத்துவிட ' முடியும்!' என்று சொல்லப்படுவதில்தான் எந்த அளவுக்கு உண்மை இருக்கிறது என்று அவனுக்கு அப்போது புரிந்தது.

திடீரென்று என்ன தோன்றிற்றோ, நீல் கமல் தனது யோசனையை மாற்றிக் கொண்டு, டிரைவரை வில்சன் கார்டன் பக்கமாகப் போகச் சொன்னாள்.

வினோத்தான் மீட்டரைப் பார்த்துப் பணம் கொடுத்தான்.

ஒரு குறுக்குத் தெரு வழியாக வினோதை அழைத்துக் கொண்டு நடந்தாள் நீல்கமல்.

வினோத் ஏதோ கேட்க ஆரம்பிப்பதற்குள் நீல் கமல் பேச ஆரம்பித்தாள்.

''பசவங்குடிக்குப் போய் பிரண்ட் அறையில் உட்கார்ந்து பேசுவதை விட காற்றோட 'லால் பாக்'கில் உட்கார்ந்து பேசினால் என்ன என்று தோன்றிற்று. 'மெயின் என்ட்ரன்ஸ்' பக்கம் எங்கள் ஆட்கள் நடமாட்டம் எப்போதாவது இருக்கும். அதான் இந்தப் பக்கம் வந்தேன். ஒரு மூலையா போய் உட்கார்ந்துண்டுபேசலாம்.... என்ன சொல்றீங்க?....'' என்று கொஞ்சியபடி கேட்டாள் நீல்.

''ஓ....கே... ஐ ஹேவ் நோ அப்ஜெக்ஷன்ஸ்'' என்றான்.

லால் பாக்கில் நுழைந்து, உட்புறமாகத் தள்ளிப் போய், ஜனநடமாட்டப் பகுதியிலிருந்து விலகி ஓரமாக, ஒரு புதர் மறைவில் இருவரும் அமர்ந்து கொண்டனர்.

நீல் கமல் தனது முகத் திரையை அகற்றினாள்.

''நீல் .... இந்த வேஷத்தை எதுக்





மெல்போர்ன் நகரப் பூங்காவில் ஓர் அறிவிப்புப் பலகை : "புல்தரை மீது நடக்கக் கூடாது. மீறி நடந்தால், நபர் ஒருவருக்கு இரண்டு ஷில்லிங் அபராதம் விதிக்கப்படும்.
இருபது பேர்களுக்கு மேற்பட்ட பிக்னிக் கோஷ்டிகளுக்கு சலுகை உண்டு." —கோ. நீபா

காகப் போட்டேன்னு விவரமாகச் சொல்லு'' என்றான்.

''நீங்க நேத்து ராத்திரி என் ரூம்ல இருக்கச்சே டேவிட் வந்துட்டுப் போனப்புறம் நீங்களும் பின்புறம் வழியா வெளியே போய், முன் பக்கம் வந்து உங்க அஸிஸ்டெண்ட் டோட கிளம்பினீங்க. நான் மாடியிலேந்து லைட்டை அணைச்சுட்டுக் கவனிச்சுண்டு இருந்தேன்.

''இசுர்னு எங்க வீட்டு எதிர்த்தாப்பல இருக்கிற ஒரு முட்டுச் சந்துலேருந்து டேவிட் வெளியே வந்தான். நீங்க ரெண்டு பேரும் போறதையும் பார்த்துண்டே இருந்தான். என் வீட்டையும் முறைச்சுட்டுக் கிளம்பிப் போனான்.

''எனக்கு ஒரே பயமாயிடுச்சு. 'நான் ஒங்களோட சேர்ந்துண்டு தங்களோட கோஷ்டிக்கு எதிரா வேலை செய்யறேன்' அப்படின்னு டேவிட் நிச்சயம் பாஸ் கிட்டே சொல்லிடுவான்.

''என் கூடப் படுத்துக்கணும்னு நேத்திக்கு வந்தான். மாடியிலே குரல் கேட்டுதே யார்னு கேட்டான். ஏதோ சொல்லி அனுப்பிட்டேன். தங்கூடா உங்களைப் பார்த்ததும் நிச்சயம் அவன் புரிஞ்சுப்பான். அவன் பேச்சைக் கேட்டு 'பாஸ்' என்னைக் கொன்னுடப் போறாரேன்னுதான் உடனே இந்த வேஷத்தோட கௌம்பிட்டேன். இது மாதிரி சில வேஷங்களை ரெடியா வெச்சிருக்கேன். நல்ல வேளையா என் பிரெண்ட் தன்னோட வீட்டுச் சாவியை என்கிட்டக் கொடுத்துட்டு ஊருக்குப் போயிருந்தது ஞாபகம் வந்தது. உடனே பசவங்குடிக்குக் கிளம்பிப்போனேன். உங்க மாமா வீட்டுக்கு மல்லேஸ்வரம் போகறேன்னு சொன்னீங்களே தவிர அட்ரஸ் கொடுக்கல்லே. எப்படியும் பத்து மணி சுமாருக்கு எனக்குப் போன் பண்ண மல்லேஸ்வரம் சர்க்கிளுக்கு வருவீங்கன்னு எதிர்பார்த்து வந்தேன். என் யூகம் சரியாயிடுச்சு'' என்றாள்.

''இப்ப என்ன பண்றதா உத்தேசம் நீல்?''

''நான் திரும்ப அவங்ககிட்டே போக மாட்டேன்.... உங்களோட வந்துடறேன்.''

''நோ....நோ... அவசரப்பட்டு எதையும் செஞ்சுட்டாக் காரியம் கெட்டுடும்... நான் உன் வீட்டுக்கு வந்திருப்பேனோ என்று டேவிட்டுக்குச் சந்தேகம் இருக்க முடியுமே தவிர, நிச்சயமா முடிவு செஞ்சிருக்க முடியாது.... அவசரப்பட்டு உங்க பாஸ்கிட்டே சொல்லியிருக்க மாட்டான்.... அப்படியே சொல்லியிருந்தாலும் உடனே உங்க பாஸ் உன்னைக் கொன்னுட மாட்டார்... நீ திரும்ப வீட்டுக்குப் போ.... உனக்கு ஆபத்து வராதபடி பாதுகாக்க நான் ஏற்பாடு பண்ணறேன்...அபாயம்னு தோணினா உடனே கௌம்பி வந்துடு... நீ கொஞ்ச நாள் அவங்களோட இருந்தாத்தான் நெறைய விஷயம் தெரிஞ்சுக்க முடியும்... எல்லோரையும் சரியான சமயத்துல மொத்தமா மடக்கி உள்ளே தள்ள வசதியா இருக்கும்...''

''வேண்டாங்க....பயமா இருக்கு...'' நீல் கமல், விநோத்தின் கைகளை எடுத்துக் கன்னங்களில் வைத்து அழுத்திக் கொண்டாள்.

''சீ... நான் இருக்கச்சே எதுக்குப் பயப்படறே.... ஏதாவது ஆபத்துன்னு போலீஸ் டிபார்ட்மெண்டையே கூட்டி வந்து உன்னைக் காப்பாத்த மாட்டேனா...''

''அதோட இன்னும் ஒண்ணுங்க. ஜோஸ், டேவிட் ரெண்டு பசங்களும் என்னை அனுபவிக்கணும்னு எப்பப் பார்த்தாலும் வட்டமிடறாங்க.... அந்த நாய்ங்களைக் கண்டாலே எனக்குப் பிடிக்கலே....''

''தோ பார் நீல்... இதுவரையிலே வேறே வழியில்லாதயோ, நீயே தேர்ந்தெடுத்தோ எத்தனையோ பேர் கிட்ட ஏன் இவங்க கிட்டேயே போயிருப்பே... கொஞ்ச நாள் பல்லைக் கடிச்சுச் சமாளிச்சு இருந்தேன்னா எல்லாம் சரியாயிடும்... அதுக்குன்னு அவங்களுக்குச் சரின்னு சொல்ல வேண்டாம்... இல்லேன்னும் சொல்ல வேண்டாம். ஒதுங்கின மாதிரி நடந்துக்க.... விஷயத்தை அவங்க கிட்டேந்து சேகரிச்சு எங்கிட்டே சொல்லிடு... நான் பார்த்துக்கிறேன்.... அது போகட்டும்.... 'பாஸ்'ன்றவன் யார்...அவனைப் பத்திச் சொல்லு....''

''பார்த்ததில்லேங்க...மர்மமாவே இருந்து காரியங்களைச் சாதிக்கிறான்.... பொம்பளைங்களை வெச்சுக் காரியம் சாதிக்கிறானே தவிர, எங்களை நம்பறதில்லே.... ஏதோ பெரிசாச் செய்யறதுக்குப் பிளான் போடறான்னு நியூஸ்.... என்னன்னு தெரியலே... மெட்ராஸ்லே கூட அவனுக்கு ரகசிய இடம், ஆட்கள் இருக்காங்க....''

''சரி... நாம்ப கௌம்பலாமா.... என்னோட வரச்சே இந்த டிரஸ்லே இருக்கட்டும். நீ எங்கே போகப் போறே?''

''வாங்க ரெண்டு பேரும் ஏதாவது ஓட்டல்லே சாப்பிடலாம். நான் பசவங்குடி போய் இந்த டிரெஸ்ஸை மாத்திண்டு,

மாமேதை மணிமொழி:



### சங்கீதம்

தேகப்பயிற்சி உடலுக்கு எத்தனை அவசியமோ அவ்வளவு மூளை வளர்ச்சிக்குச் சங்கீதமும் அவசியமாகும்.




**அன்புள்ள வாசகர்களுக்கு,**

வணக்கம். விரைவில் புதுத் தொடர் ஒன்றை ஆரம்பிக்கிறேன்.

இதை எழுதுவதில் விசேஷ விருப்பம் எதுவும் கிடையாது. உங்களுக்குக் குஷியான பொழுதுபோக்கைத் தரவேண்டும். அவ்வளவே!

அதற்காக என் நடையையும், வார்த்தைகளையும் உங்கள் சேவகர்களாக ஆக்கப் பார்க்கிறேன்.

கிடைத்திருக்கும் விஷயம் எனக்குப் பிடித்தமானது.

அது பிறந்த விதம் இதோ:

ஒரு பத்திரிகைத் துணுக்.

ஒரு போலீஸ் ரிப்போர்ட்.

Calendar of Madras records.

Shipbuilders' project report.

ஆகியவைகளை வாசிக்க, அதன் கூட்டுக் கலவையில் பிறந்த சுகம் தான் கதை!

இதை எழுதுவதில் எனக்குப் பிரத்தியேக மகிழ்ச்சி! ஏனெனில் தொட்டதும் கொஞ்சம் ஜோராக வந்துவிட்டது கதை!

இதை சுவாரஸ்யமான புதுமைகளில் எடுத்துச் செல்ல விரும்புகிறேன்.

இனி, இன்பமான வாரங்களை உங்களுக்கு விரும்பும்,

புஷ்பா தங்கதுரை

ஜனவரி 6

'80

ஸ்பெஷல்

அதிக பக்கங்கள்

செம்பியன் எழுதும்

முழு நீள நாவல்

வேறுபல புதிய அம்சங்கள்.



''அந்த மனிதர் மஞ்சள் பத்திரிகையில் வேப்பு விளக்கும் பகுதியைப் பற்றிப் பச்சையாக எழுதுகிறார். பிளூஃபிலிம் காண்பித்து ஏராளமாகக் கறுப்புப் பணம் சம்பாதிக்கிறார். ஆனால் என்னைப் பொறுத்தவரை அவர் வெள்ளை உள்ளம் படைத்தவர்தான் சார்!'' —எஸ். ஸ்ரீதர்

சிவாஜிநகர் வீட்டுக்குப் போறேன். உங்க புரோகிராம் என்னங்க....?''

''நான் மெஜஸ்டிக் கிட்டே ஹோட்டலில் ஒரு ரூம் எடுத்துக்கறேன். ரூம் நெம்பர், போன் நெம்பர் கொடுத்துடறேன். எப்ப வேணும்னாலும் நீ என்னைச் சந்திக்கலாம்...'' என்றான் வினோத்.

இருவரும் கிளம்பினர். ஒதுக்குப்புறமான ஒரு ஹோட்டலில் சாப்பாடு ஆனதும் ஓர் ஆட்டோவில் பசவங்குடிக்குக் கிளம்பினர்.

வீட்டின் உள்ளே வந்தால்தான் ஆயிற்று என்று அடம் பிடித்தாள் நீல் கமல். தனி வீடு.

''ஃபிராங்காச் சொல்லிடறேங்க. நல்ல படியா இருந்தா என் பிரெண்ட்.... என்னை மாதிரியே தவறிப் போயிட்டா... ஆனா என் மாதிரி கொலைகாரங்க கிட்ட மாட்டிக்காம வேறு விதமா வாழறா. பெரிய பணக்காரங்களுக்கு மட்டும் இணங்கிப் பணம் சம்பாதிக்கிறா. இப்பக் கூட ஒரு மில் முதலாளியோட ஊட்டிக்குப் போயிருக்கா... அதான் வீடு காலி.... எங்கிட்டே சாவி கொடுத்துட்டுப் போயிருக்கா'' என்றாள் நீல்.

நீல் கமலின் விளக்கத்துக்கு ஏற்றாற் போல் இருந்தது வீடு.

''நான் வரேன்.... நீ வீட்டுக்குப் போ... சாயங்காலம் ஏழு மணிக்கு மல்லேஸ்வரம் சர்க்கிள் பஸ் ஸ்டாப் கிட்டே மீட் பண்ணுவோமே, அங்கே வா... இடையிலே ஏதாவது ஆபத்துன்னா சிடி மெயின் போலீஸ் ஸ்டேஷனுக்கு போன் பண்ணி எனக்கு மெஸேஜ் கொடுத்துடு.'' வினோத் வெளிவந்து ஓர் ஆட்டோ பிடித்தான்..

சுநீதாவுக்கு எதுவுமே பிடிக்கவில்லை.

தன் பிறந்த நாள் அன்று ஊரில்தான் இல்லை என்றால் ஒரு டிரங்க் போட்டுப் பேசியோ இல்லாவிட்டால் ஒரு டெலிகிராம் மூலமாகவோ வினோத் வாழ்த்து அனுப்பவில்லையே என்கிற குறை அவளுக்கு.

காலேஜ் போகத் தயார் செய்துகொண்டு இருந்தபோது போன் மணி அடித்தது... வேலைக்காரி எடுத்து 'உங்களுக்குத் தாங்க' என்றதும், 'வினோத்'தானோ என்கிற நப்பாசையில் ஓடினாள்.

அவளுடைய தோழி நளினி பேசினாள்.

''ஹாய் சுநீத்... இன்னிக்கு நாம்ப எல்லோரும் லேவன் தர்ட்டி ஷோவுக்கு சபையர்லே 'மரோ சரித்ர' படம் போறோம்... ரிசர்வ் பண்ணிட்டோம்....'' என்றாள்.

''போடி நான் வரலை... ஐ ஆம் இன் நோ மூட்....''

''நீ ஒண்டி இன்னிக்கு வரலேன்னா வீ வில் பாய்காட் யூ ஃபார் எவர்.... எல்லாம் சரி தான்டி... உன் லவர், தானே நாளை வந்துடுவார்.... இவ்வளவு தூரம் ஏங்கறயே, இன்னும் லவ் விஷயத்தை உங்க அப்பா கிட்டக் கூடச் சொல்லலைங்கிறயே, உங்கப்பா கூடாதுன்னுட்டா வாட் வில் யூ டு.....?''

''ஏய் நளின்.... அபசகுனமா பேசாதே.... பாரேன் இன்னும் ஆறு மாசத்துலே வினோத்தை நான் மாரேஜ் பண்ணிக்கலைன்னா என் பெயரையே மாத்திக்கிறேன்.''

''கல்யாணம் பண்ணிண்டாலும் உன் பேரு சுநீதா-வினோத்னு மாறித்தான் போகப் போறது! மரியாதையா சபையர் வந்து சேரு. மார்னிங் காலேஜ் கட். ஆஃப்டர் நூன் போயிடலாம்.''

அற்புதமான காதல் கவிதை போல் இருந்த அப்படத்தில் தோழிகள் சொக்கிப் போனார்கள். 'என்ன இருந்தாலும் பால சந்தர் பாலசந்தர்தான்டி....' 'கமல் என்னமா நடிக்கிறான்', 'கமல்—சரிதா ஜோடி பிரமாதம்....' இப்படிப் பல கமெண்டுகள்.

சுநீதாவுக்கு வினோதின் நினைவைப் படம் மறுபடியும் வரவழைத்து ஏக்கத்தில் ஆழ்த்தியது. உட்லண்ட்ஸ் டிரைவினில் மசால் தோசை சாப்பிட்டுவிட்டுக் காலேஜ் போய்ச் சேர்ந்தனர்.

மதியம் இரண்டாவது பீரியட். இண்டியன் எகனமிக்ஸ் சப்ஜெக்ட். போரடித்துக் கொண்டிருந்தது. பியூன் வந்தான்.

சுநீதாவைச் சந்திக்க யாரோ வந்திருப்பதாகவும் கெஸ்ட் ஹாலில் இருப்பதாகவும் சொன்னான். வினோதாக இருக்குமோ என்று சுநீதா பறந்தாள்.

யாரோ நடுத்தர வயதுக்காரர் டீசண்டாக டிரஸ் செய்திருந்தார்.

''வாம்மா...நான் வினோத்தின் சித்தப்பா. வினோத் உன்னைப் பற்றி லெட்டர் போட்டிருந்தான்....''

சுநீதாவின் உள்ளம் துள்ளியது. ''அங்கிள் ப்ளீஸ் வெயிட்... நான் பெர்மிஷன் வாங்கிண்டு வந்துடறேன்.'' சுநீதா ஓடினாள்.

ஐந்து நிமிடங்களில் இருவரும் காலேஜுக்கு வெளியே வந்தனர். காரில் வந்திருந்தார்.

அவர் காரில் டிரைவர் சீட்டில் உட்கார்ந்து பக்கத்தில் அவளை உட்காரச் சொன்னார்.

உட்கார்ந்தாள்.

வண்டி புறப்பட்டுக் கொஞ்ச தூரம் செல்வதற்குள் மூக்கின் முன் கர்சீப் உள்ள ஒரு கரம் நீண்டு.... ஏதோ நெடி.... ''வினோத்! நீங்க எங்கே....? காப்பாத்துங்க....''

மயக்கமானாள். சீட்டில் சாய்ந்தாள்.

வண்டி பெங்களூர் நோக்கிச் செல்லும் சாலையில் ஓடலாயிற்று! (தொடரும்)

மாமேதை மணிமொழி :



## தவறுகள்

வயல்களுக்குக் குப்பை உரமாவது போல் வாழ்க்கையில் நாம் செய்யும் தவறுகளும் நம்முடைய காரியங்களுக்கு உரமாகும்.

● 'தடுமாற்றங்கள் பதினேஞ்சு' என்ற என்னுடைய சிறுகதைத் தொகுப்பு பற்றிய விமர்சனம் பார்த்தேன். ''அட்டைப் படம் சுத்த அபத்தம்'' என்ற கடைசி வரி என்னைத் திடுக்கிட வைத்துவிட்டது. ஜெயராஜின் இளமை ஊஞ்சலாடுகிற கவர்ச்சிப் படத்தை நான் அட்டையில் போடவில்லைதான். தடுமாற்றங்கள் பதினேஞ்சு அட்டையில் இருக்கிற தடுமாறும் கால் நடங்களையும் புதுமையான முறையில் அமைந்திருக்கிற எழுத்துக்களையும் தேர்ந்த இலக்கியவாதிகள், விமர்சகர்கள் பலர் பாராட்டிச் சொல்லியிருக்கிறார்கள்.

இன்னொரு விஷயம். 'பிற பெண்களிடம் போகாத மனிதரில்லை' என்ற கருத்தை 'மயான காண்டம்' என்ற கதையில் நான் வெளிப்படுத்தி யிருப்பதாக இந்த விமர்சகி சொல்லுகிறார். இப்படியொரு அசிங்கமான, அபத்தமான கருத்தை அந்தக் கதையில் நான் வலியுறுத்தவுமில்லை, எந்தக் கதையிலும் வலியுறுத்தவும் மாட்டேன்.

பாளையங்கோட்டை ஏ.ஏ.ஹெச். கே. கோரி

● ரயில்வே — போஸ்டாபீஸுக்கு போனஸ் கொடுப்பது கஜானாவைக் காலி செய்யத்தான் என்று கார்ட்டூன் வரைந்துள்ளீர்கள். உற்பத்தித் திறனுடன் இணையாமல் சகட்டுமேனிக்கு ஒரு மாத போனஸ் சரண் சிங் கொடுத்திருந்தால் நீங்கள் குறிப்பிடுவது 50 சத விகிதம் பொருந்தலாம். உற்பத்தித் திறனுடன் இணைந்த போனஸ் ஓர் அறிவார்ந்த தீர்வு.

திருச்சி என். பானு

● போனஸ் பற்றிய கார்ட்டூன் நன்றாக உள்ளது. சம்பள உயர்வு, போனஸ் என்று அனைவரும் போராடும்போது அது எந்த விதத்திலும் உதவப் போவதில்லை, விலைவாசிகள் மேலும் உயரத்தான் பயன்படும் என்பதை நினைத்துப் பார்ப்பதில்லை. கைக்குக் காசு வந்தால் போதும் என்றநிலை!

திருச்சி அலெக்ஸ் ஃபெலிஸியா

● இந்திரா தூண்டில் போட்டு பகுகுணாவைப் பிடிப்பதாயும் அதில் சிக்காமல் பகுகுணா தானே வலிய வந்து அவர் பக்கமிருக்கும் கூடையில் விழுவதாயும் கார்ட்டூன் போட்டிருந்தீர்கள். இது மிகவும் தவறு. இந்திராஜீ பகீரதப் பிரயத்தனம் பண்ணியே இந்திர — தந்திர — மாயா ஜாலங்கள் புரிந்து டில்லி இமாம் மூலமே பகுகுணாவைப் பிடிக்க முடிந்தது!

கரப்பாடி க. முருகேச பாண்டியன்

● இந்திரா — பகுகுணா கார்ட்டூன் அருமை என்றால் 'சஞ்சய் ராஜ்யம்' தலையங்கம் தமிழக மக்களுக்குச் சரியான நேரத்தில் எச்சரிக்கை செய்துள்ளது.

வெள்ளிச்சந்தை என். ரங்கசாமி

● ஒரு பக்கம் சர்வாதிகாரத்துக்கு எதிர்ப்புத் தலையங்கம். இன்னொரு பக்கம் விற்பனை எண்ணிக்கையை உயர்த்த அநீதி புரிந்த பிரபலஸ்தர்களுக்கு Blowup ல் அவர்தம் திருஉருவம். தயவுசெய்து Blowup Posterல் அரசியல்வாதிகளை நுழைக்க வேண்டாமே.

சென்னை-13 ந. சந்தானம்

● 'சஞ்சய் ராஜ்யம்' வெளியிட்ட தாங்களே இந்திராவின் Blowup Poster வெளியிடுவது தங்களின் நடுநிலைக்கு ஓர் எடுத்துக் காட்டு.

மன்னார்குடி. எஸ். சாந்திபூஷன்

● கல்கியில் இந்திரா Blowup ரொம்ப பேஷ். ஹிட்லர் Blowup எந்த இதழில் அச்சாகும்?

கம்பரசம்பேட்டை டி. ஆர். அலமேலு

● எதிலும் முதலில் நிற்கும் வீணை பாலசந்தர், இதிலும் முதலில் நிற்பது ஒன்றும் ஆச்சரியமில்லை! ஆச்சரியப்படக் கூடியது காஸினோ தியேட்டரில் ஆங்கிலப் படங்கள் பார்ப்பவர்களும் தமிழர்களே என்பதை அதன் மானேஜர் மறந்திருப்பதே!

மன்னார்குடி. அஜிதா

● காஸினோ தியேட்டர் மானேஜர் கூறியிருப்பது நூற்றுக்கு நூறு உண்மை. தமிழ்ப் படம் ஓட ஆரம்பித்து விட்டால் வெற்றிலை பாக்கு எச்சில் ஆறாக ஓடும். ஆசனங்களில் சுண்ணாம்பைத் தடவி, குஷன் ஆசனங்களைப் பிளேடால் கிழித்துத் தியேட்டரை அதிகபட்சம் எவ்வளவு அசிங்கப்படுத்த முடியுமோ அத்தனையும் செய்து விடுகிறார்கள்.

கும்பகோணம் டி. எஸ். சீதாராமன்

● அட்டைப் படத்தைச் சிரிக்க வைக்கும் நகைச்சுவைப் படத்தால் தொடர்ந்து இப்படியே அலங்கரியுங்களேன்.

''மன்னிப்பா? வைராக்கியமா?'' சிறுகதை எந்த மொழியிலிருந்து தமிழாக்கப்பட்டது என்பது தெரிவிக்கப்படவில்லையே ஏன்?

முசிறி ஆர். மரகதம்

[தெலுங்கு - ஆசிரியர்]



# எதிர்பார்ப்புக்களும், ஏமாற்றங்களும்!

பாமா கோபாலன்

"ஸ்வர்ணா, நீ சொல்வது நிஜம் தானா?" கண்கள் விரியக் கேட்டாள் பூமா.

கடற்கரையில் கூட்டம் சேர ஆரம்பித்து விட்டது. மனத்தையும், உடலையும் மகிழ்விக்கும் காற்று. ஓயாத கவலைகள் என்று ஓலமிடும் அலைகள்....

"ஆமாண்டி பூமா. நான் சொல்றது உனக்கு ஆச்சரியமாகத்தான் இருக்கும். நானே அதிர்ந்து போய் விட்டேன். சதீஷ் அப்படிச் சொன்னதும்...." என்று சொல்லி, கைப்பையின் உள்ளே இருந்த சதீஷின் போட்டோவை எடுத்துச் சிநேகிதி பூமாவிடம் கொடுத்தாள். பூமா மணமானவள். ஸ்வர்ணாவின் ஆபீஸும் பூமாவின் அலுவலகமும் ஒரே தெருவில் இருந்ததால், நடுவே இருந்த ஹோட்டலிலும், பஸ் ஸ்டாண்டிலும் சிநேகம்.

பூமா, சதீஷின் போட்டோவைப் பார்த்தாள். அளவான கிருதா, அரும்பு மீசை. மெலிதான புன்னகை. நம்பிக்கையூட்டும் விழிகள்.

பூமா சொன்னாள்: "பலே, ஆள் நன்றாகத்தான் இருக்கிறார்.... எங்கே வேலையாம்?"

"பிரைவேட் கம்பெனி — காஷியர் வேலை. அம்மா மட்டும்தான் கூட இருக்கிறாள்."

"அதிருஷ்டம்டி. வேறே நாத்தனார், மச்சினன் பிக்குப் பிடுங்கல் இல்லை...." சற்று நிறுத்தினாள் பூமா. ஸ்வர்ணாவை ஒரு முறை ஆழப் பார்த்துவிட்டு, பெருமூச்சு விட்டாள்.

"ஸ்வர்ணா, உன் அழகுக்கும் நிறத்துக்கும் கலையா வாங்குற பாங்க் வேலை உனக்கு. இந்த சதீஷை விட்டால்?...." தயங்கியபடி கேட்டாள் பூமா.

"பூமா, ஒரு பெண்ணுக்கு வேலை, சம்பளம் மட்டும் போதுமா? நானும் என் அழகைப் பற்றிக் கர்வமாகத்தான் இருந்தேன். என் அழகுக்கு ஜோடியாகத் தேடினேன், மூன்று வருஷமாய். கிடைக்கவில்லையே!... அம்மாவுக்கும் சலித்துப் போச்சு... அது சரி பூமா, உன் மனசைத் தொட்டுச் சொல். நீ உன் திருமணத்துக்கு முழு மனசோடவா சம்மதம் தந்தாய்?" ஸ்வர்ணாவின் குரலில் நிஜம் இருந்தது. ஏக்கம் இருந்தது: வார்த்தைகளாக வெடித்தது.

வலது கை ஆள்காட்டி விரலால் கடல் மணலில் வட்டங்கள் வரைந்தாள் பூமா; அவள் கண்களில் ஈரம் பளபளத்தது.

ஸ்வர்ணா அதிர்ந்தாள். "ஏய்...என்னடி இது அழறே?... ஐயாம் ஸாரி...."

"ச்சீ... அழலேடி .... என் மனக் குறையை யாரிடமாவது சொல்ல வேண்டாமா?.... ஸ்வர்ணா, நானும் வேலைக்குப் போகிற பெண். மாதம் நானூறு ரூபாய் சம்பாதிக்கிறேன். என் மனசிலேயும் ஒரு ராஜகுமாரன் பவனி வந்தான். கோட்டைகள் கட்டினேன். ப்ச... என்ன பிரயோசனம்?... நாலைந்து பேர்களை நானே நிராகரித்தேன். வந்தவர்களில் ஒருவன் குள்ளம்; மற்றொருவன் ஏகப் பருமன்; இன்னொருவன் முகத்தில் களையே இல்லை. இப்படிக் கழித்துக் கொண்டே வந்தேன். என் லட்சிய புருஷன் வந்துவிடுவான் என்ற நம்பிக்கையில்...."

ஸ்வர்ணா பொறுமையாகக் கேட்டுக்கொண்டிருந்தாள். தோழியின் வாழ்க்கையிலும் தனக்கு நேர்ந்தது போன்றே நடந்திருப்பதைக் கேட்டு வருத்தமாக இருந்தாலும், ஒரு பாதி மனசு சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தது.

"ஸ்வர்ணா... வந்த வரன்களை நான் தட்டிக் கழிக்க ஆரம்பித்ததும் அம்மா திட்ட ஆரம்பித்தாள். எனக்குத் திமிராம். சம்பாதிக்கிற திமிர். அழகின் திமிர். இப்படி ஏதேதோ... அம்மா படுக்கையில் விழுந்தாள். மூனே மாசம். கதை முடிந்தது...." பூமா கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"....இப்பப் புதுப் பட்டம் வேறே. தாயில்லாப் பொண்ணு! அப்பாவும் நடையா நடந்தார். மகாலிங்கபுரம் என்ன, சங்கர மடம் என்ன.... ஹும். பலனில்லை. இருட்டிலே ஒரு நாள் சைக்கிள் ரிக்ஷா மோதித் தெருவிலே விழுந்தார். அதன் விளைவு... என் திருமணம்!..."

ஸ்வர்ணா ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

"என்னடி ஸ்வர்ணா, இப்படிப் பார்க்கிறே? அவர் படுக்கையில் விழ, என் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு அலைந்தது தானே காரணம்?... என்ன செய்ய? எனது கனவுகள் பகல் கனவுகளாயின. அப்புறம் வந்த வரன் — பார்க்கச் சுமார்தான். குணம் தங்கம் என்றார்கள். அதனாலே வரனுக்குத் தட்சணை அதிகமாக இருந்தது. சம்பாதிக்

கும் பெண் — கறவை மாடு என்றார்கள். பிரயோசனமில்லே. அதனால்தான் குறைவாகக் கேட்டோம் என்றார்கள்! அப்பாவின் உடல் நிலே பார்த்து, என் கனவுகளைச் சிதைத்துக் கொண்டேன். அப்பா போய்விட்டால், எனக்கு யார் பின்னே தேடப் போகிறார்கள் என்ற பயமே என்னை உலுக்கிற்று...''

முறுக்கு, சுண்டல் விற்ற பையன் சற்று நின்று, சோகமாய்க் குரல் கொடுத்துவிட்டுப் போனான்.

பூமா தொடர்ந்தாள்:

''ஸ்வர்ணு, சில சமயங்களிலே ஜோடிப் பொருத்தமில்லாத் தம்பதிகளைப் பார்க்கும் பொழுது எனக்குச் சிரிப்பா வரும் — கல்யாணத்துக்கு முன்னடி! பல பெண்களைப் பார்த்தோ, அல்லது ஆண்களைப் பார்த்தோ திருப்தி யடையாத மனசு விரக்தியின் எல்லேக்குப் போய், 'சரி... இனிமேல் இந்தச் சித்திரவதை வேண்டாம்!.... இன்னேக்கு நமஸ்காரம் செய்யறதுதான் இந்தப் படலத்தில் கடைசி' என்ற முடிவுக்கு வந்து, கல்யாணத்துக்குச் சம்மதம் தெரிவித்துவிடுகிறார்கள்!....''

பூமா முடித்தாள். ஸ்வர்ணுவுக்கு ஒரு மாதிரியாகி விட்டது. மனத்தில் தெம்பு குறைந்தது.

''பூமா.... திருமணம் ஆன பிறகு, உன் சம்பளப் பணத்தை...'' இழுத்தாள் ஸ்வர்ணு.

''அது ஒரு வேடிக்கை!.... கல்யாணக் கடன் அடைபடுகிறவரை நான் என் அப்பாவுக்கு மாதம் இருநூறு தரச் சம்மதம் அளித்தார் என் கணவர். கடன் அடைந்தவுடன் நிறுத்தச் சொல்லி விட்டார்! ம்... அதுவரை அத்தை வீட்டில் இருந்த அப்பா, மேல் உலகம் போய்ச் சேர்ந்துவிட்டார்!... இருந்திருந்தால் என் பாடு திண்டாட்டமாய்ப் போயிருக்கும்...

''உன் விஷயத்தில் எப்படி ஆகப் போகுதோ?'' பூமா நிறுத்தினாள். தோழி மௌனம். அவளே தொடர்ந்தாள்: ''ஏண்டி ஸ்வர்ணு, உன் சதீஷ்தான் சம்மதம் தந்து விட்டார்னு சொல்லி ஆரம்பித்தாய்...'' முழங்கால்களைக் கட்டிக் கொண்டு பேசினாள்.

''...சம்மதம் தந்தார்.... சரி.... திருமணம் ஆன பிறகும் வேலேக்குப் போகணும் என்றார். சந்தோஷமாய் இருந்தது. சம்பளப் பணத்தை அப்படியே என் அம்மாவிடம் கொடுத்துவிடலாம் என்றார்....''

''பின்னே என்னடி... ரொம்பக் குஷி தானே?'' கண்களைச் சிமிட்டினாள் பூமா.

''...ஹூம்... ஒரு ஆண் இவ்வளவு தாராளமாக நடந்துக்கிறாரேன்னு உன்னைப் போலப் பூரிச்சுத்தான் போனேன். கடைசியா அவர் சொன்னதைக் கேட்ட பிறகுதான் அவரோட உள் நோக்கம் புரியறது.'' ஸ்வர்ணுவின் குரல் கரகரத்தது.

''என்னடி புதிர் போடறே?'' பூமா அதிர்ந்தாள்.

''இந்த ஆண்பிள்ளைகளே இப்படித்தான். வாய்ப் பேச்சில் வீரர்கள்தான். திருமணம் ஆன பிறகு அவரும், அவர் அம்மாவும்— அதாவது என் மாமியாரும் — எங்கள் வீட்டுக்கு வந்துடுவாங்களாம்!....''

''அடே! என்ன புதுசா இருக்கு?... ஒரு விதத்திலே சௌகரியம் ஆச்சே?'' பூமா புன்னகை செய்தாள்.

''என்ன சௌகரியம் போ!.... இவர்கள் வீட்டைக் காலி பண்ணிட்டு எங்க வீட்டுக்கு வந்துடுவாங்க சரி. அப்புறமா வீட்டு வாடகையை என் அம்மாதான் தரணும் — அதாவது என் சம்பளத்திலிருந்து! எப்படி? அது மட்டுமா? அவருடைய அம்மா சின்ன வேலேயைக் கூடச் செய்ய மாட்டாளாம். என் அம்மாவே செய்யணுமாம்.'' கண்கள் கலங்கின ஸ்வர்ணுவுக்கு.

''இதென்னடி கூத்து? அவரோட அம்மா என்னதான் செய்வாளாம்?''

''சதீஷோட அம்மா ஸ்கூல் ஹெட் மிஸ்ட்ரஸ் ஆச்சே. வேலேக்குப் போய்விடுவாளாம். வீட்டு வேலே செய்ய மாட்டாளாம். என் அம்மாவே பாடு படணும்!... சே! என் அம்மாவுக்கு வேலேக்காரி வேலே வேறயா?.. சதீஷ்கிட்டே கல்யாணத்துக்கு இஷ்டமில்லேன்னு சொல்லிடப் போறேன்...''





# பூக்குழி

## லக்ஷ்மி

### 16

சுய உணர்வு வந்தபோது மறுபடியும் சுற்று முற்றும் பார்த்தான் காமேஷ். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை மணற் பரப்பில் யாரையும் காணவில்லை. பளிச்சென்று காய்ந்த உச்சி வெயில் உடலைச் சுட்டது. சற்று முன் பச்சையாகக் காணப்பட்ட கடல் இப்போது கருநீலமாக — விஷம்போல் அவனுக்குத் திகைப்பையும் அச்சத்தையும் கொடுத்தது. மெல்லக் குனிந்து — ராஜ்குமார் கழற்றி வைத்து விட்டுப் போன உடைகளைப் பைக்குள் நன்றாகத் தள்ளி மூட எடுத்தபோது சட்டைக்குள்ளிருந்த அவனது புத்தம் புது கடிகாரம் நழுவி மண் மீது தொப்பென்று விழுந்தது.

துயரமா — வெறுப்பா — பரிதாபமா — பகைமையா — இனம் பிரிக்க முடியாத கலவை உணர்விலே குமுறிக்கொண்டு அதை எடுத்து உள்ளங் கையில் வைத்து அழகு பார்த்தான் காமேஷ்.

அந்தப் புதிய கடிகாரத்தை ஊருக்குப் புறப்படுவதற்கு முதல் நாள்தான் ராஜ்குமார் வாங்கியிருந்தான்.

''ஏற்கெனவே கிராமத்திலே வீட்டில் ஒரு ஸீகோ டிஜிட்டல் கடிகாரத்தை வெச்சிட்டு வந்திருக்கேன். வெளிநாட்டுக்குப் போய்விட்டு வந்த சரவணன் ஸார் எனக்குப் பரிசாக வாங்கிக் கொண்டு வந்தார். ஒரு எச். எம். டி. கையோடு உபயோகத்திலே இருக்கு. இப்பப் புதுசா இன்னொரு டிஜிடல் கடிகாரத்தை இத்தனை விலைக்கு வாங்கிட்டுப் போகிறேன். — அகல்யா கட்டாயம் கோபிச்சுக்குவா. பணத்தைத் தண்ணியா செலவழிக்கிறேன்னு என்னைப் பத்தி அவளுக்கு அபிப்பிராயம்.

''அதுக்கென்ன பண்றது...? பெரியதனக்காரர் கனகசபையின் செல்ல மகனாகப் பிறந்துட்டேன். தேவைங்கறதே தெரியாம வளர்ந்துட்டேன். அது என் தப்பான்னு நான் வேடிக்கையாகச்சண்டை போடுவது வழக்கம். கட்டும் செட்டுமாகக் குடித்தனம் செய்ய விரும்புகிறவள் அகல்யா. நான் என் அப்பாவைப் போலக் கொஞ்சம் செலவாளி. பிடிச்சதை உடனே வாங்கி அனுபவிக்கணும்னு ஆசைப்படறவன். இது மாதிரி சில்லறை அபிப்பிராய பேதங்கள் எங்கள் இருவரிடையே நிறைய உண்டு. எல்லாத்தையும் நீ வேடிக்கை பார்க்கப் போறே...''

சிரித்துக் கொண்டே முதல் நாள் ராஜ்குமார் பேசியதன் நினைவு நெஞ்சை அடைத்துக்கொண்டது போல் காமேஷ் திணறிப் போனான்.

கடிகாரத்தையும் பைக்குள் போட்டு, ஜிப்பை இழுத்து மூடிப் பையை எடுத்துத் தோள் மீது மாட்டிக் கொண்டான்.

'பாவிப் பயல்! எல்லா ஆசைகளையும் ஒட்டு மொத்தமாக எடுத்துக் கொண்டு ஆழமான கடலுக்குள் அமுங்கிப் போய்விட்டானே! ம்....' இப்போ.... தனக்குள்ளே முணு முணுத்தபடி மெல்ல நடந்தான்.

டாக்ஸியிலிருந்து இறங்கி ராஜ்குமார் தங்கியிருந்த அந்தப் பெரிய ஹோட்டலுக்குள் நுழைந்தான்.

வரவேற்பறையில் மேஜைக்குப் பின்னால் நிரந்தரப் புன்னகையுடன் கண்களால் சிரித்த அந்த அழகி ரிசப்ஷனிஸ்ட் அவனைக் கண்டதும் திரும்பிப் பின்னால் ஆணிகளில் தொங்கிய சாவிகளில் ஒன்றை எடுத்தாள். 'டிட் யூ ஹேவ் எ நைஸ் டைம்?...' கேட்டபடி சாவியை அவனிடம் நீட்டினாள்.

பளிச்சென்று அவனுக்குப் புரிந்துவிட்டது. ஆள் மாறாட்டத்தை அவள் கண்டு கொள்ளவில்லை. அவனை ராஜ்குமார் என்று எண்ணிக் கொண்டிருக்கிறாள்.

தன் முன்னே கிடந்த நோட்டுப் புத்தகத்தை அவசரமாக இடது கையால் திருப்பி விட்டு ரிஸப்ஷனிஸ்ட் மறுபடியும் மோகனமாக முறுவலித்தாள்.

''இன்று இரவு வரைதான் இங்கே தங்கப் போறீங்க இல்லையா?''

குழப்பத்துடன் பதில் தோன்றாது ஒரு கணம் மலைத்துப் போய் நின்றான் காமேஷ்.

அன்று இரவு வண்டிக்கு அவர்கள் இருவரும் திருச்சிக்குப் புறப்படுவதாக ஏற்

பாடுகள் செய்துவிட்டிருந்தான் ராஜ் குமார்.

இப்போது?

மின்னலாக ஓர் எண்ணம் அவனுள் பளிச் சிட்டது.

''இன்னும் இரண்டு தினங்கள் சென்னை யிலேயே தங்குவதாக உத்தேசம்..''

''அப்படியா?'' அவள் மெல்லச் சிரித்தாள். ''அந்த அறை உங்களுக்குச் சௌகரியமாகத் தானே இருக்கு?''

''ரொம்பப் பிடிச்சிருக்கு; அதோட இந்த வரவேற்பறையும் ரொம்பப் பிடிச்சிருக்கு...'' கண்களால் அவளை விழுங்கிக்கொண்டு சாவியை எடுக்கக் கையை நீட்டியவன் அவ ளது கரத்தையும் மெல்ல வேண்டுமென்றே தொட்டான்.

அழகான பெண்களைக் கண்டால் அப்படி அவனுக்கு ஒரு துணிச்சல். முகம் சிவந்து போன அவள் மெல்லத் தன் கையை இழுத் துக்கொண்டாள்.

''மன்னிச்சுக்கோங்க.... தவறிப் போய்....'' என்று குழைந்தபடி அவளை மென்மையாகப் பார்த்தான்.

''பரவாயில்லே — மிஸ்டர் ராஜ்குமார்.. தொடர்ந்து உங்களுக்கு அந்த அறை தேவைப் படும்னு எழுதி வைக்கறேன்'' என்று அவசரமாகக் கூறிவிட்டு வேறு ஒரு பயணி யின் பக்கம் திரும்பி விட்டாள்.

லிஃப்டுக்குள்ளே நுழைந்து ஐந்தாவது மாடியை அடைந்து வராந்தாவில் வேகமாக நடந்தபோது.... அந்தப் பகுதியைப் பார்த் துக் கொள்ளும் பையன் எதிர்ப்பட்டான்.

''நீங்க..... பகல் சாப்பாட்டுக்கு வர மாட்டீங்கன்னு சொல்லிவிட்டுப் போனீங்களே? இன்னும் சாப்பாடு நேரம் முடியல்லே. ரொம்பக் களைப்பா இருந்தால் ரூம் சர் வீஸைக் கூப்பிடுங்கோ. கொண்டு வந்து கொடுப் பாங்க....'' என்று கூறி விட்டு விரைந்தான்.

எதிர்ப்பட்ட இரண்டா வது ஆளுக்கும் அவன் ராஜ்குமாராகவேதோன்று கிறான்.

அவசரமாகக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றான். அறை சுத்த மாக இருந்தது. பெட்டி வைக்கும் ஸ்டாண்டில் ராஜ்குமாரின் பெட்டிகள் ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கி வைக்கப் பட்டிருப்பதைக் கண்டான்.

'எல்லாம் தயாராகத்தான் வைச்சிருக் கான். ஆனால் பயணத்தின் திசைதான் மாறிப் போச்சு.'

உரத்த குரலில் ஆவேசமாகச் சிரித்துக் கொண்டு கண்ணாடி முன் வந்து நின்றான். ரிஸப்ஷனிஸ்ட் — ஹோட்டல் பையன் இவர்கள் எல்லோரும் குழம்பியதில் அதிசய மேயில்லே.

கட்டைக்குள் மறைந்து போன ராஜ் குமார் கண்ணாடி வழியே அவனைப் பார்த்து முறுவலிப்பதைப் போன்ற தன் தோற்றத் தையே அவனும் வியப்புடன் ஆராய்ந்து பார்த்துக் கொண்டு நின்றான்.

அதே சமயம் அவனது மூளையும் பல திட்டங்களை வேகமாக ஆராயத் தொடங் கியது.

ரூம் சர்வீஸ் எண்களை வேகமாகச் சுழற்றி ''ரோஸ்ட் சிக்கன்—ஃப்ரைட் ரைஸ்—ஸாலட் கஸ்டர்ட் அண்ட் ஜெல்லி காப்பி....'' பட பட வென்று வேண்டியதைச் சொல்லிச் சாப் பாட்டை அறைக்குக் கொண்டு வர உத்தர விட்டான்.

தோள் பையிலிருந்த சாவிக் கொத்தை எடுத்து மேலே இருந்த பெட்டியைத் திறந் தான்.

ராஜ்குமார் எல்லாவற்றையும் ஒழுங்காகச் செய்ய விரும்புகிறவன். சாமான்களைச் சீராகப் பெட்டிக்குள் அடுக்கி வைத்திருந் தான். ஒரு பக்கத்தில் பாஸ்போர்ட் — டிரா வலர்ஸ் செக் — டிராப்ட் — பம்பாய் பாங்கியில் மாற்றிப் பத்திரமாக பிளாஸ்டிக் பைக்குள் போட்டுச் சுருட்டி வைத்திருந்த நாலா யிரம் ரூபாய் பணம்... ரயில் பயணச் சீட்டு என்று எல்லாம் ஒழுங்காக வைக்கப்பட்டிருந்



## கவிஞன் பெற்ற பரிசு

பாரசீக மன்னர் ஷாவின் பரம்பரை பற்றி ''ஷானமா'' என்னும் காவியம் பாடிக்கொண்டிருந்தார் பெர்தௌஸி.

''உங்கள் கவிதை ஒவ்வொன்றுக்கும் ஒரு பவுன் தருகிறேன்'' என்பது மன்னன் கவிஞரிடம் செய்து கொண்டிருந்த ஒப்பந்தம்.

கவிதைகள் ஒன்றல்ல. ஒரு நூறாக... ஆயிரமாக வளர்ந்து கொண்டே சென்றதைக் கண்ட மன்னருக்குக் கஜானா காலியாகி விடுமோ என்ற பயம் உண்டாயிற்று.

''பெர்தௌஸி உங்கள் கவிதை ஒவ்வொன்றுக்கும் ஒரு வெள்ளிக்காசு தருகிறேன்'' என்று சொன்னார்.

பெர்தௌஸிக்கு வந்தது கோபம், மன்னன் வாக்கு தவறிவிட்டானே என்று! கவிஞருக்கு உரிய மிடுக்குடன் 'யாருக்கு வேண்டும் உங்கள் பொருள்' என்று கூறிக் கொண்டு புறப்பட்டு விட்டார்.

கால்நடையாகப் பல ஊர்களைக் கடந்து தன் சொந்த ஊரில் தன் வீட்டு வாயிலை நெருங்கிய போது, அங்கு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

விளையாட்டில் ஒரு பாட்டு... ஒரு குழந்தை பாடியது!

அவரது ''ஷானமா''வில் ஒரு பாடல். துள்ளிக் குதித்தார் பெர்தௌஸி. வளரும் தலைமுறை... சின்னஞ்சிறு குழந்தைகள் என் பாட்டைப் பாடத் துவங்கிவிட்டன! அரசனின் பொன் நாணயங்கள் தரமுடியாத மகிழ்ச்சியைக் குழந்தைகள் பாடிய தம் பாட்டில் கண்டார் அவர்.

வீட்டில் நுழைந்த மறுகணம் அவர் சரித்திரம் முடிந்து விட்டது...

தவறு செய்துவிட்டதை உணர்ந்து சொன்னபடி பொற்காசுகளை அடுக்கி அனுப்பி இருந்தார் ஷா ஒரு வண்டியில். அந்த வண்டி ஊருக்குள் நுழையும் அதே வேளையில் பெர்தௌஸியின் சவப்பெட்டி வெளியே சென்று கொண்டிருந்தது!

—குழந்தை எழுத்தாளர் சங்க மாநாட்டில்
மீ. ப. சோமசுந்தரம் கூறியது
கேட்டு எழுதியவர்: இரா. சுராஜ்

[மூன்று நாள் மகாநாட்டில் திரு ஏ. வி. எம். அவர்களின் படத்தை வானதி திருநாவுக்கரசு திறந்து வைத்தார். புதிய நூல்கள் பல வெளியிடப்பட்டன. ஏ.வி.எம். பதக்கங்கள் பரிசளிக்கப்பட்டன. குழந்தைப் பாடல் அரங்கமும் சிறப்பாக நடந்தது. படம்: அருணோதயம் பதிப்பகம் அருணன் மிக அதிகமான குழந்தைகள் நூல்களை வெளியிட்டதற்காக உயர்நீதி மன்ற நீதிபதி மோகனிடம் கேடயம் பெறுவதைக் கண்டு மகிழ்கிறார் வள்ளியப்பா. கேடயம் பெற்ற வேறு இருவர்: குழந்தை எழுத்தாளர்களான பூவண்ணன், தங்கமணி.]



தனை. பணத்தையும் பயணச் சீட்டுக்களையும் சட்டைப் பையில் எடுத்துத் திணித்துக் கொண்டு பெட்டியைப் பூட்டினான்.

அதற்குள் பையன் உணவுத் தட்டைக் கொண்டு வந்து மேஜையின் மீது வைத்தான்.

இரண்டு பேர் சாப்பிடப் போதுமான உணவு... அத்தனையையும் ஒரே மூச்சில் முடித்துவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டு அறையைப் பூட்டிவிட்டுக் கிளம்பினான். ரயில்வே நிலையத்துக்குச் சென்று பயணச் சீட்டுக்களை ரத்துச் செய்துவிட்டு அவன் திரும்பியபோது அந்த அழகி ரிஸப்ஷனில் இருக்கவில்லை.

நோட்டுப் புத்தகத்திலே தலையைக் கவிழ்த்துக் கொண்டு தொங்கு மீசை வாலிபன் ஒருவன் மேஜைக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தான்.

''அறையைக் காலி பண்ணப் போகிறேன். உடனே பில் தேவை!'' காமேஷ் சொன்னபோது அவன் நிமிர்ந்து உட்கார்ந்து ஆவன செய்ய ஆரம்பித்தான்.

ஹோட்டலுக்குச் சேர வேண்டியதை ராஜ்குமாரின் பணத்திலிருந்து எடுத்துக் கட்டிவிட்டுச் சாமான்களை எடுத்து வரச் செய்து ஒரு டாக்ஸியில் ஏற்றிக் கொண்டு தன் லாட்ஜுக்குக் கிளம்பி விட்டான்.

சிறிது நேரம் ராஜ்குமாரின் ஹோட்டல் அறையில் சுத்தமான படுக்கையில் சாய்ந்து கொண்டிருந்து விட்டு லாட்ஜின் அழுக்குப் பிடித்த படுக்கை விரிப்பின் மீது உட்கார்ந்த போது அவனுக்கே எரிச்சலாக இருந்தது.

ராஜ்குமார் சுகபோகமான வாழ்க்கையை அனுபவித்திருக்கிறானே.... என்று எண்ணிய போது அவன் நெஞ்சு பொறாமையில் நெருப்பாக எரிந்தது.

ராஜ்குமார் — அவன் தாய் — மனைவி — இறந்துபோன அவன் தந்தை என்று எல்லோர் மீதிலும் பொங்கிக் கொண்டு வந்த வெறுப்பை அடக்கமாட்டாது எழுந்து அறைக்குள் வெறி பிடித்த வேங்கை போல் முன்னும் பின்னும் சிந்தித்தபடியே உலாவினான்.

இரண்டு நாட்கள் கழிந்தன. காலை மாலை இரண்டு வேளையும் பத்திரிகைகளை வாங்கி ஒரு வரிகூட விடாது படித்தான்.

அவன் எதிர்பார்த்த விவரம் எதிலும் காணவில்லை.

கடைத் தெருவைச் சுற்றி வந்தான்.. சினிமாப் பார்த்தான். கண்ட ஹோட்டலில் புகுந்து விரும்பியதையெல்லாம் வாங்கிச் சாப்பிட்டான். தொடர் சங்கிலி போல் சிந்தனையோடு தொடர்ந்து சிகரெட்டுகளை ஊதித் தீர்த்தான். இரவு வேளையில் உறக்கமின்றி எண்ணங்களோடு படுக்கையில் அமைதியில்லாது புரண்டான். இன்னும் எத்தனை நாட்கள் இப்படி வீணாகக் காத்திருப்பது? அவனுக்கு ஆத்திரமாகத்தான் இருந்தது. நான்கு நாட்களுக்குப் பின்னர் அன்று காலை பொதுக் குளியலறையில் குளித்துவிட்டு அவசரமாக உடுத்திக் கொண்டு அவன் காலைக் காப்பியைத் தேடிக் கொண்டு கீழே

வந்தபோது பார்த்தான். எதிர்ச் சாரி புத்தகக் கடையின் கதவின் மேலிருந்த போஸ்டரில் கொட்டை எழுத்துக்களில் காணப்பட்ட செய்தி கண்களைத் தாக்கின.

'கடலில் மூழ்கிய இளைஞனின் பரிதாப கரமான சாவு!'

பத்திரிகையை வாங்கிப் பரபரப்புடன் படித்தான். முன் பக்கத்திலேயே விவரம் கொடுக்கப்பட்டிருந்தது.

''நேற்று மாலை மகாபலிபுரக் கடற்கரை ஓரமாக ஒதுங்கிக் கிடந்த பிணம் இருபத்தாறு வயதுடைய வாலிபனுடையது என்று அனுமானிக்கப்படுகிறது. நீல வண்ண ஸ்நான உடை மட்டுமேதான் உடலில் காணப்பட்டது. நாட்கள் சில ஆகிவிட்டதால் உடல் அழுகின நிலையில் இருப்பதாலும், மீன்கள் கொத்தி விட்டதாலும் முகம் உருத் தெரியாத நிலையில் உள்ளது. கடலில் நீந்த வந்தவன் விபத்துக்குள்ளாகி இருக்க வேண்டும் என்று நம்பப் படுகிறது. போலீஸ் புலன் விசாரித்துக் கொண்டிருக்கின்றனர். உறவினர்கள் அடையாளம் கண்டுகொள்ள, பிணம் அரசியலார் பிணக் கிடங்கில் வைக்கப்பட்டுள்ளது.''

நீல வண்ண ஸ்நான உடையில் நீலக் கடலுக்குள் அலைகளை அணைத்தபடி ராஜ்குமார் மேலும் மேலும் நீந்திச் செல்லும் நினைவு நெஞ்சுக்குள் எழுவே 'பத்திரிகையை மடித்துக் கைவிடுக்கில் செருகிக்கொண்டு வேகமாக நடந்தான் காமேஷ்.

'கடலுக்குள்ளே போனவன் இப்போ பிணக் கிடங்கிலே உறவினருக்காகப் பிணமாகக் காத்துக்கிட்டிருக்கிறான்!....'

டாக்ஸி ஒன்றைப் பிடித்துக் கொண்டு ரயில்வே நிலையத்துக்கு விரைந்தான். அன்று இரவு வண்டிக்கு அவனுக்குப் பயணச் சீட்டு கிடைத்து விட்டது.

அப்படியே திருநல்லூருக்கு ஒரு தந்தியையும் அனுப்பினான். 'ரயில் தவறிவிட்டது. உடனடியாக இடம் கிடைக்கவில்லை. தாமதமாகிவிட்டது. அம்மாவிடம் சொல்லவும். இன்று இரவு வண்டியில் வருகிறேன்.—அன்புடன் ராஜ்குமார்.'

அகல்யா பெயருக்கு அனுப்பிவிட்டுத் தனக்குள்ளே புன்னகைத்த வண்ணம் வெளியே வந்து இன்னொரு டாக்ஸியில் ஏறிக்கொண்டான்.

(தொடரும்)

## ராஜாஜி சூட்டிய பெயர்!



எனக்குப் பெண் குழந்தை பிறந்த போது அந்தக் குழந்தைக்குப் பெயர் சூட்டும்படி 16—12—55ல் நான் எழுதிய கடிதத்துக்கு ராஜாஜியிடமிருந்து 19—12—55 தேதியிட்டு வந்த கடிதம்:

அன்புடன்
உங்களுடைய பிரேமமான கடிதம் பார்த்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன். நம்முடைய புராதன நல்வழக்கத்தின்படி நம்முடைய குழந்தைகளுக்கு நம்முடைய முன்னோர்களின் பெயர்களில் ஒன்றை வைக்க வேண்டும். அதுவே சரியான முறை. ஆனபடியால் உங்கள் தாயார் அல்லது பாட்டியின் பெயரைக் குழந்தைக்கு வைத்தால் அதுவே எனக்கும் பிடிக்கும்.
(ஒ - ம்) இராஜகோபாலாச்சாரி

இந்தக் கடிதம் எனக்கு 20ம் தேதி கிடைத்தது. என் தாயார் மற்றும் பாட்டி பெயர்களைக் குறிப்பிட்டு அந்தப் பெயர்களை ஏற்கனவே எங்கள் குடும்பத்தில் வைத்துவிட்ட நிலையை விளக்கி எழுதினேன். உடனே 23—12—55 தேதியிட்டு ராஜாஜி பதில் தந்தார்கள்.

அன்புடன்
மற்றப் பெயர்களுக்கிணங்க இந்தக் குழந்தைக்கு ''நம்பின்னை'' என்று பெயரிடவும். குறுகிய வழக்கும் பெயர் ''நப்பு'' என்று ஆகும்.
ஆசிகள். (ஒ - ம்) இராஜகோபாலாச்சாரி

இரண்டு கடிதங்களையும் பாதுகாத்து அடிக்கடி கண்களில் ஒற்றிக் கொள்கிறேன். —மா. வரதராஜன்



# திருமலை-திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

## திருமலை – திருப்பதிக்குச் செல்லும் பக்தர்களுக்கான வசதிகள்

திருமலை திருப்பதி தேவஸ்தானம் திருமலைக்கு வரும் சேவார்த்திகளுக்குப் பல வசதிகளைச் செய்துள்ளது.

தங்கும் வசதி: பெரிய பல சத்திரங்களில் தட்டு முட்டுச் சாமான்கள் தவிர மற்ற வசதிகள் உள்ள பல அறைகள் இலவசமாக குடும்பங்களுக்கு அளிக்கப்படு கிறது. மின்சாரமும் தண்ணீரும் இலவசம்.

கட்டில் நாற்காலி முதலிய வசதிகளும் உள்ள சில அறைகள் மிதமான வாட கைக்கு கிட்டும்.

உணவு வசதி: திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல காண்டீன்களை நடத்தி, அவற்றில் சுகாதாரமான சைவ உணவுகள் பெரும்பாலும் நாள் முழுதும் இரவும் பகலும் மிதமான விலைகளில் தருகிறது.

எந்தச் சேவார்த்திக்காவது மருத்துவ வசதிகள் தேவைப்பட்டால் திருமலை யிலும் திருப்பதியிலும் திருமலை-திருப்பதி தேவஸ்தான மருத்துவ நிலையங்களில் இவ் வசதிகள் உடனே கிடைக்கின்றன.

திருப்பதியில் தபால் தந்தி இலாகா எல்லா வசதிகளுடனும் டெலிபோன்களுட னும் இயங்கி வருகின்றன.

சேவார்த்தி பெருமாளின் தரிசனத்தை எந்த விதக் கட்டணமும் செலுத்தாமல், பாதுகாக்கப்பட்ட 'க்யூ' வரிசையில் சென்று பெறலாம். க்யூ மண்டபங்களில் மின் விசிறிகள், குடிதண்ணீர் மற்றும் குளியல் அறை வசதிகள்கூட உள்ளன. சேவார்த்தி க்யூ மண்டபத்தில் எந்தவிதச் சிரமமும் இல்லாமல் நன்கு சௌகரியமாக அமர்ந்து கொள்ளலாம்.

க்யூ மண்டபத்தில் நுழைந்த எல்லா சேவார்த்திகளுக்கும் அன்றைய தினமே பெருமாள் தரிசனம் நிச்சயம் கிடைக்கும். சர்வதரிசன க்யூ நன்கு பாதுகாக்கப்பட்டிருப் பதால் பக்த ஜனங்கள் அமைதியாக வந்து பெருமாள் தரிசனம் பெறலாம்.

பெருமாள் தரிசனத்துக்கு நன்கு பாதுகாக்கப்பட்ட க்யூ வரிசையில் வசதியாக நின்று கிடைக்கும்.

திருமலைக்குள் போக்குவரத்து வசதிகளும் உண்டு. தங்குமிடங்களிலிருந்து கோவிலுக்கும் பஸ் ஸ்டாண்டுக்கும் போக்குவரத்து வசதிகள் ஏற்பாடு செய்யப் பட்டுள்ளன.

எக்ஸிக்யூடிவ் ஆபீசர்

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

விடுதலை பெற்றதற்குப் பதில் நடவடிக்கையாகச் சட்டமறுப்பு இயக்கத்தைத் தாற்காலிகமாக ஒரு மாதத்துக்கு நிறுத்தி வைத்தார் மகாத்மா. கைதிகளை விடுவிக்குமாறு அரசைக் கேட்டுக் கொண்டார். அவசரச் சட்டங்களை வாபஸ் பெறுமாறு கோரினார். ஆட்சியை எதிர்ப்போரின் வீரத்தை அவர் மெச்சினார். ஆனால் சிலர் ரகசிய நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்காக மிகவும் வருந்தினார்: ''ரகசிய நடவடிக்கைகள் பல சமயங்களில் கெட்டிக்காரத் தனத்தைக் காட்டலாம். ஆனால், பல சந்தர்ப்பங்களில் அவை பயன் படாமலும் போவதுண்டு. மேலும் அவை பயம்மிக்க, அபரிமிதமான எச்சரிக்கையுடன் கூடிய சூழலை உருவாக்கவே உதவுகின்றன.''

சி. ஆருடைய நோக்கில் சாத்துவீக சட்டமறுப்பு இயக்கத்தை மகாத்மா தாற்காலிகமாக நிறுத்தி வைத்ததானது, 'சத்தியாக்கிரஹத்தின் உன்னத வடிவம். பிராயசித்த உபவாசத்தின் உச்ச கட்டத்தில் அவரது ஆன்மாவிலிருந்து நேரடியாக வெளிப்பட்ட மகத்தான தியாகம்.' விடுதலையானதைப் பயன்படுத்திப் புதிதாக ஒரு புரட்சி இயக்கத்தை நடத்தியிருந்தால் அது பண்பற்ற செயலாயிருக்கும்.

அது யதார்த்த நோக்கில் சரியான காரியமாகவும் இருந்திராது. காங்கிரஸ் படையினர் களைப்புற்றிருந்தனர். குடும்பத் தலைவர்கள் 1930லும் 1932லும் நீண்டகாலத்துக்குச் சிறை புகுந்திருந்தார்கள். குடும்பத்தின் வருவாய் பாதிக்கப்பட்டிருந்தது. பலர் இன்னமும் உள்ளேயே இருந்தார்கள். காங்கிரஸுக்கு நன்கொடைகள் தருவதற்குத் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்தது. அதன் நிதியெல்லாம் அரசாங்கத்தால் கைப்பற்றப்பட்டிருந்தது. எனவே அரசை எதிர்ப்போருக்கு நிதி உதவி ஏதும் கிடைக்க வாய்ப்பில்லை. மக்கள் படை புதிதாகத் திரட்ட முடியாமல் அவசரச் சட்டங்கள் தடுத்தன.

காங்கிரஸின் யுத்த தந்திரங்களைப் பற்றிப் புனராலோசனை செய்யச் சமயம் வந்துவிட்டது. உபவாசம் முடிந்து சிறிது காலத்துக்கெல்லாம் காந்தியும் சி. ஆரும் இருமுறை சந்தித்துப் பேசினர். அவர்கள் நான்கு முடிவுக்கு வந்தனர்:

முதலாவது, பெருவாரியான மக்கள் ஈடுபடும் போராட்டத்தை நிறுத்திவிட வேண்டும். இரண்டு: உடனடியாக இல்லாவிட்டாலும் கூடிய சீக்கிரம் ஆட்சி அதிகாரத்தை நமது கரங்களுக்கு மாற்றிக்கொள்வது பற்றி யோசிப்பது சரியானதாக இருக்கலாம். பிரிட்டிஷார் வகுத்து வரும் அரசியல் சாசனத்துக்கு உள்ளடங்கியேகூட இப்படிச் செய்யலாம்.

மூன்று: ஒரு சிறிய கூட்டத்தினர் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டும். இது, உச்ச நிலையில் தீவிரமாக நடக்க வேண்டும். நான்கு: வைஸ்ராயிடமிருந்து பழைய பதில்தான் மறுபடியும் வரும் என்றாலும் பேட்டி அளிக்குமாறு கோரி ஒரு கடிதம் வில்லிங்டனுக்கு அனுப்பப்பட வேண்டும்.

''மகாத்மா வில்லிங்டனுக்கு எழுதும் ஒரு கடிதத்தை நீங்கள் எடுத்துச் செல்ல முடியுமா?'' என்று பிரபல தலைவர் சாஸ்திரியை சி. ஆர். கேட்டார். நேரடியாக காந்தி வைஸ்ராய்க்கு எழுதினால் மூக்குடைப்பது போலப் பதில் கிடைக்கும். அது மறுபடி உடனடியாகப் பகைமையை வளர்க்கலாம் என்று சி. ஆர். எண்ணினார். ஆனால் சாஸ்திரி சி. ஆரின் யோசனைப்படி நடக்கும் மனநிலையில் இருக்கவில்லை.

குறிப்பிட்ட ஏதேனும் ஓர் அம்சத்தைத் தேர்ந்தெடுத்து அதனை ஆட்சேபித்துப் போராடினாலும் அதற்காக மறுபடியும் சிறைப்பட நேரும் என்பது நிச்சயம். எனவே தாங்கள் இருவரும் கஸ்தூரி பாவும் சிறையிலிருந்து வெளிவந்திருக்கும்போதே லக்ஷ்மி–தேவதாஸ் திருமணத்தை நடத்தி வைத்துவிட வேண்டும் என்று மகாத்மாவும் சி. ஆரும் தீர்மானித்தனர். சி. ஆர். கஸ்தூரி பாவுக்கு எழுதினார்:

''அன்புள்ள பா,.... பாபு எவ்வளவு காலம் நாம் அணுகும்படியான நிலையில் சுதந்திரமாக இருப்பார் என்பது நமக்குத் தெரியாது. இப்போதுள்ள வாய்ப்பை நாம் பயன்படுத்திக் கொள்ளவில்லையானால் மறுபடியும் இதுபோன்ற வாய்ப்பு எப்போது கிட்டும் என்று சொல்ல முடியாது. எனவே எவ்வளவு அவசரமாகவும் அமைதியாகவும் நடத்தி



தேவதாஸ் காந்தி



மேல் அட்டை புகைப்படம் எடுத்தவர் :
**வித்யாவ்ரதா**

மாமேதை மணிமொழிகள் :
தொகுப்பு : **எஸ். வி. எஸ்.**

---

முடிக்க வேண்டுமானாலும் சரி, கல்யாணத்தை இப்போது நடத்திவிடுவது என்று நாங்கள் தீர்மானித்துள்ளோம். நீங்கள் இந்த யோசனையை ஆமோதிப்பீர்கள் என நம்புகிறேன். ஜூன் 12ம் தேதி வாக்கில் நான் பூனா செல்லும்போது லக்ஷ்மியையும் பாப்பாவையும் உடன் அழைத்து வருகிறேன். அதன் பிறகு ஒரு நல்ல நாளில் உங்கள் ஒப்புதலுடன் லக்ஷ்மி சம்பிரதாயப்படியும் இறுதியாகவும் உங்கள் குழந்தையாகவே விளங்கக் கடவுள் அருள் புரிவார் என்று நம்புகிறேன். அன்புடன் உங்கள் நலனை விரும்பும், என்றும் உங்கள் பிரிய, ராஜா.''

ஜூன் 16ந் தேதி திருமணம் பூனாவில் லேடி பிரேம் லீலா தாக்கர்ஸேயின் வீட்டில் நடந்தது. ஆசாரக்காரர்கள் பலர் இந்தக் கலப்பு மணத்துக்கு எதிர்ப்புத் தெரிவித்துக் குரலெழுப்பினர். ஆனால் இதனை சடுகட்டுவதற்கும் அதிகமான அளவில் வேறு பலர் நல்வாழ்த்துத் தெரிவித்தனர். படிப்பாளியும் சீர்திருத்தவாதியுமான லக்ஷ்மண் சாஸ்திரி ஜோஷி என்ற மகாராஷ்டிரப் புரோகிதர் சடங்குகளை நடத்தி வைத்தார்.

உண்ணாவிரதம் உருவாக்கிய உடல் நலிவிலிருந்து இன்னும் முழுமையாக மீளாத மகாத்மா, விருந்தினரின் பட்டியல் மிகவும் சுருக்கமாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தினார். தேவதாஸின் சகோதரர் ராமதாஸ்கூட அழைக்கப்படவில்லை. நண்பர்கள் பரிசளித்த பட்டுப் புடவைகளைத் திருப்பித் தந்துவிடுமாறு காந்தி லக்ஷ்மியிடம் கேட்டுக் கொண்டார்.

மாமனாரின் கண்டிப்பு, கட்டுப்பாடுகளை ஏற்பது சுலபமல்ல. ஆனால் அவற்றுடன் அவரது அன்பும் அவள் தகப்பனாரின் மகிழ்ச்சியும் இணைந்திருந்தன. மேலும் சத்தியமானதாக விளங்கி ஆனால் நிறைவேறாமல் நழுவிக் கொண்டே இருந்ததான ஒரு கனவு நினைவாகியிருந்தது. அவளும் தேவதாஸம் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவேயில்லை.

• • •

ஜனவரியில் ராஜேந்திர பிரசாத் கைதானதிலிருந்து எம்.எஸ். ஆனே காங்கிரஸின் தாற்காலிகத் தலைவராக விளங்கி வந்தார். மகாத்மா, வி. ஆர்., ஆனே ஆகியோர், சிறையிலிருந்து வெளிவந்திருக்கும் காங்கிரஸ் தலைவர்கள் பூனாவில் ஜூலை மாதத்தில் சந்திக்க வேண்டும் என்று தீர்மானித்தனர்.

3000க்கு மேற்பட்டவர்கள் அந்த மகாநாட்டில் கலந்து கொண்டனர். வைஸ்ராயைப் பேட்டி காண முயலுமாறு மகாத்மாவுக்கு அதிகாரம் வழங்கினர். ஜூலை 15ந் தேதி நள்ளிரவு தாண்டி இருபது நிமிஷத்துக்கு வி. ஆர். பூனாவில் ஒரு தந்தி நிலையத்துக்குப் போய் மகாத்மாவின் தந்தியை அனுப்பினார். கிடைத்த பதில் வைஸ்ராய் பேட்டியளிப்பது சாத்தியமில்லை என்பதைத் தெரிவித்தது.

இப்படி மூக்குடைபடும் என்பதை எதிர்பார்த்திருந்த காந்தி, வி. ஆர்., ஆனே ஆகிய மூவரும் இதன் எதிரொலியாக ஆட்சிக்கு எதிர்ப்பைத் தெரிவிக்கும் மார்க்கத்துக்குத் திரும்புவது என்று தீர்மானித்தனர். இந்த எதிர்ப்பு நாடு தழுவிய நோக்கிலன்றி, குறிப்பிட்ட அம்சத்தில் குறிப்பிட்ட சிலர் சட்டமறுப்புச் செய்வது என்ற வடிவில் இருந்தது. ஆகஸ்டு முதல் தேதி மகாத்மா, கஸ்தூரி பா, மகாதேவ தேசாய் ஆகியோருடன் சபர்மதி ஆசிரமத்தின் முப்பது தொண்டர்களும் ஒன்றாகச் சேர்ந்து சபர்மதியிலிருந்து ராஸ் என்ற கிராமத்துக்குக் கால்நடையாகச் சென்றார்கள். இது அப்போதிருந்த சட்டத்தை மீறுவதாக இருக்கவே அந்தக் குழுவினர் கைது செய்யப்பட்டனர்.

மூன்று நாட்களுக்குப் பிறகு காந்தி விடுவிக்கப்பட்டார். ஆனால் பூனா நகரை விட்டு எங்கும் செல்லக் கூடாது என்று அவருக்கு உத்தரவிடப்பட்டது. இதற்கு அவர் கீழ்ப்படிய மறுத்தபோது மறுபடியும் கைது செய்யப்பட்டு ஓராண்டு சிறைத் தண்டனை பெற்றார். சிறைச்சாலையில் ரொம்பவும் உடல் சுகவீன முற்றதானது — உயிர்வாழ மாட்டார் என்றே தோன்றியது — அவரது விடுதலைக்கு வழி செய்தது. மெல்ல மெல்ல உடல் தேறிவந்த அவர் தமது தண்டனைக் காலம் முடியும் தருணமாகிய 1934 ஆகஸ்டு வரை எதிர்ப்பையும், அரசியலையும் கைவிடப் போவதாகவும், ஹரிஜன இயக்கத்தில் ஈடுபடுவதுடன் நிறுத்திக் கொள்ளப் போவதாகவும் அறிவித்தார்.

(தொடரும்)

**தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்**

---

மாமேதை மணிமொழி :



**கடவுள் தத்துவம்**

காந்தம் இரும்பை இழுப்பதுபோல், கற்பூரம் நெருப்பைத் தேடுவது போல், மின் சக்தி எப்போதும் பூமியில் பாய்ந்து மறையக் காத்திருப்பது போல் உயிரானது தான் பிரிந்த தெய்வத்தைத் தேடுகிறது.

நுங்கம்பாக்கத்தில் ரோல் ஆன் ரோலர்ஸ் ஸ்கேட்டிங் தளம் ஒன்று இருக்கிறது. இரு கால்களில் அணியும் பூட்ஸ்களில் மொத்தம் எட்டு சக்கரங்கள் பொருத்தப்பட்டிருக்கும். முதலில் இரு கால்களாலும் சறுக்கத் தொடங்கினாலும் பாலன்ஸ் பெற்ற பிறகு ஒரு கால் சக்கரங்களை மட்டும் பயன் படுத்தியும் ஸ்கேட் செய்யலாம். இந்தச் சறுக்கு விளையாட்டில் நம் புகைப்பட நிபுணர் உத்ராவுக்கே பயிற்சி உண்டு. தம் உடல் வனப்பைக் காக்கவே இந்தப் பயிற்சியை மேற்கொண்டதாக அவர் கூறுகிறார்! புகைப்பட நிபுணர் உத்ராவின் விளக்கம்:

"இப்பொழுது மழைக்காலம். ஸ்கேட்டிங் ரிங் முழுக்க ஒரே ஈரம். வெளிச்சம் வேறு போதிய அளவு இல்லாமல் ஸ்டிரைக் செய்தது! இருப்பினும் ஸ்கேட்டிங் காட்சியை எடுக்கச் சென்றேன். இந்த ஸ்கேட்டிங் கலையில் தேர்ந்த திரு கனகராஜ் மழையைப் பொருட்படுத்தாமல் பயிற்சியளிக்க முன் வந்தது பாராட்டுக்குரியது. 1/250-இல் ஸ்கேட்டிங் காட்சியைப் படமெடுத்தேன்.

திரு கனகராஜ் சறுக்கி விழாமல் சறுக்கு விளையாட்டில் சமாளிப்பதையும் குப்தாவுக்கும் பயிற்சி அளிப்பதையும் காணலாம். படம்: உத்ரா

விளக்கம்: குண்டுமணி

# SPORTS PICTURE PAGE



இலக்கியங்களிலே
துகில் படைப்புகள் — 1

# தேவதைகள்



# உருவாக்கிய ஆடை

தேவதைகள் ஆடைகளை எவ்வாறு உருவாக்குகின்றனர் என்று வேத மந்திரத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

"ஏ வஸ்திரமே, உன்னை உருவாக்க 'ரேவதி' தேவதைகள் பஞ்சை அடித்துப் பாடம் செய்தனர்; 'கிருத்திகா' தேவதைகள் நூலாக நூற்றனர்; 'தீ' என்ற தேவப் பெண்கள் நெய்தனர்; 'க்நா' என்ற தேவிகள் தறியிலிருந்து அறுத்து எடுத்தனர்; அவர்களுடன் இன்னும் ஆயிரம் தேவதைகள் சேர்ந்து இரு பக்கங்களிலும் கரைகளையும், நுனிகளையும் ஏற்படுத்தினர். இவ்வாறு எல்லா தேவதைகளும் சேர்ந்து உருவாக்கியதே பூ ஆடை."

"ஏ மாணவனே, நீ நீண்ட ஆயுளுடன் வாழ இந்த வஸ்திரத்தை உடுத்திக் கொள். நூற்று, நெய்து, கரை, நுனி முதலியவற்றை ஏற்படுத்தி இந்த ஆடையை உருவாக்கிய 'ரேவதி' முதலான தேவதைகளே நேரில் வந்து இதனை உடுத்தி விடுவார்களாக."

"ரேவதி முதலான தேவதைகளே! இக் குமாரனுக்கு நீங்களே இந்த ஆடையை உடுத்திவிட்டு, நூறு வயது வாழ அருளுங்கள். நீண்ட ஆயுள் அளிக்க வல்ல இந்த ஆடை ராஜா ஸோம தேவனுக்கு பிரகஸ்பதி தேவனால் கொடுக்கப்பட்டதாகும்."

— யாஜுஷ மந்திரப் ப்ரச்னம்.

*லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம் காலம் காலமாக வந்த இந்தியப் பண்பாட்டைப் பின்பற்றுகிறது. நேர்மையே இந்த ஸ்தாபனத்தின் அடிப்படை. "செய்யும் தொழிலே தெய்வம் அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் செயல்பட்டு மக்களுக்குச் சேவை புரிவதையே தலையாய கடமையாகக் கொண்டுள்ளது நமது லக்ஷ்மி மில்ஸ் ஸ்தாபனம்.*





# நான் கண்ட ரஷ்யா

அகிலன்

பிளிஸியிலிருந்து ஜூன் 29ம் நாள் மாலை நாங்கள் அஜர்பைஜான் குடியரசின் தலை நகரமான பாகூவுக்கு ரயிலில் கிளம்பினோம். ஜார்ஜியாவை ஒட்டியிருக்கும் குடியரசு அது. ரயிலடியில் ஒரு போர்ட்டர் வந்து நான் வேஷ்டி கட்டியிருப்பதைச் சற்று நேரம் வேடிக்கை பார்த்தார். ''பாகூவுக்குப் போகிறீர்களா?'' என்று கேட்டுவிட்டு, ''உங்கள் வேஷ்டி காற்றில் பறந்து விடப் போகிறதே, என்ன செய்வீர்கள்?'' என்பது போல் தவித்தார். 'இந்த நாட்டில் எல்லோரும் இப்படித்தான் சொல்லுகிறார்கள்' என்று நான் நினைத்துக் கொண்டு சிரித்தேன். பாகூவுக்குச் சென்ற பிறகுதான் அந்தப் போர்ட்டர் கூறியதன் உண்மை எனக்குப் புலப்பட்டது. அது மணற்காடாக இருந்த ஒரு பாலைவனத்து நகரம். காஸ்பியன் கடற்கரையில் இருக்கிறது. சில நேரங்களில் அங்கே அடிக்கும் பேய்க் காற்றில் என் வேஷ்டியை மட்டுமென்ன, என்னையே தூக்கிப் பறக்க விட்டு விடும் போலிருந்தது! பாகூவில் இருந்தவரை வேஷ்டிக்கு வேலை கொடுக்கவில்லை.

முதல் நாள் மாலை எங்களுக்குத் தமது வீட்டில் விருந்தளித்த ஜார்ஜியப் பேராசிரியர் நீக்கோலாய் எங்களை வழியனுப்ப ரயிலடிக்கு வந்திருந்தார். வந்தவர் சும்மா வரவில்லை. ரொட்டி, பன், பிஸ்கட், பழங்கள் இவற்றைக் காகிதத்தில் ஒரு மூட்டையாகக் கட்டிக் கொண்டு வந்திருந்தார். ரயிலில் போகும்போது எங்கள் இரவுச் சாப்பாட்டுக்கு அவர் செய்திருந்த ஏற்பாடு இது! நம்முடைய நாட்டில் நண்பர்கள் இட்டிலிப் பொட்டலங்கள், சாப்பாடு, பழங்கள் முதலியவற்றை ரயிலில்கொண்டு வந்து கொடுப்பதில்லையா? அன்பு நிறைந்த நெஞ்சங்கள் உலகில் எந்த மூலையில் இருந்தாலும் ஒன்று போலவேதான் தங்கள் அன்பைப் பிரதி பலிக்கின்றன. அவருடைய அந்த அன்பை இப்போது நான் நினைத்துக் கொள்ளுகிறேன். இரண்டே நாள் பழக்கத்தில் என்ன ஈடுபாடு அவருக்கு!

ரயில் பிளிஸியிலிருந்து புறப்பட்டது. நண்பர் அளித்த உணவுப் பொருள்களைப் பகிர்ந்து கொண்டு எல்லோரும் சாப்பிட்டு முடித்தோம். படுக்கைக்குச் சென்றோம். அது கோடைக்காலமானதாலும் காற்றும்

## ரஷ்யச் சிரிப்பு



✱ ஹோட்டல் மாஸ்கோவின் மாடியிலிருந்து பாகூ நகரமும் அதன் கடற்கரையும் அளிக்கும் தோற்றம்.



✖ பாகூவில் இந்திய எழுத்தாளர்கள் தங்கிய ஹோட்டல் மாஸ்கோ.

✖ காஸ்பியன் கடலுக்குள் பெட்ரோலியம் எடுப்பதற்காகப் போடப்பட்டுள்ள 17 கி. மீ. நீளமுள்ள பாலத்தின் ஒரு பகுதி.

சுகமாக வீசியதாலும் நான் அயர்ந்து தூங்கி விட்டேன். காலையில் கண் விழித்துக் கடிகாரத்தைப் பார்த்தபோது ஆறேகால் மணியாகியிருந்தது. எழுந்து முகம் கைகால் கழுவிவிட்டு ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தேன். இரண்டு பக்கங்களிலும் பார்த்தேன். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை ஒரே மணல், மணல், மணல்! பாலைவனத்தைக் கிழித்துக் கொண்டு எங்கள் ரயில் போகிறதா?

இப்படிப்பட்டதொரு பாலைவனத்தை, மருந்துக்குக்கூட ஒரு புல் பூண்டு முளைக்காத பாலைவனத்தை நான் பார்ப்பது இதுதான் முதல் முறை. வான முகடு வரையில் ஒரே மணல் வெளி; மணல் மேடுகள் மணல் குன்றுகள். காடுகளும் மலைகளும் ஏரிகளும் ஆறுகளும் நிறைந்த ஜார்ஜியாவிலிருந்து ஒரே இரவு ரயில் பயணத்தில் இவ்வளவு பெரிய மாற்றமா?

வலதுபுறத்து சன்னலுக்கு வெளியே தெரிந்த பாலை நிலத்தில், நூறடித்தொலைவில் தெரிந்த ஒரு காட்சி என்னைக் கதிகலங்க அடித்துவிட்டது. மணல் வெளிக்கு மேல் குபீரென்று நெருப்புப் பற்றி எரிவதைக் கண்டேன். வெறும் மணலுக்கு மேல் எங்கிருந்து எப்படி நெருப்புப் பற்றி எரிகிறது? யாரும் அதை அணைப்பாரில்லையா? — அது எரிந்து கொண்டே இருந்தது.

நண்பர்களை அழைத்துக் காட்டலாமென்றால் அவர்கள் அனைவரும் பொழுது விடிந்தது தெரியாமல் குறட்டை விட்டுக் கொண்டிருந்தார்கள். அருகில் நின்ற ஒரு ரஷ்யரிடம் பீதியோடு சுட்டிக் காட்டினேன். அவர் அதைப் பார்த்துவிட்டுப் புன்னகை செய்தார். நான் பேசியது அவருக்குப் புரியவில்லை, அவர் பேசியது எனக்குப் புரியவில்லை. 'ஏன் இப்படி அலட்டிக் கொள்கிறீர்கள்?' என்று அவர் கேட்பது போலிருந்தது.

மற்றோர் இடத்திலும் இப்படிக் குபீர் என்று நெருப்பு! மணலில் கூட நெருப்புப் பற்றிக் கொண்டு எரியுமா என்ன?

பிறகுதான் நான் விவரம் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அந்தப் பாலைவனத்துக்குள்ளே ஏராளமான எரி வாயுவும் இருக்கிறது. பெட்ரோலியமும் இருக்கிறது. எரிவாயு இப்படிப் பற்றிக்கொண்டு குபீர் குபீர் என்று நெருப்பைக்



''அந்தப் பாடகருக்கு 'இசைத் தென்றல்'னு பட்டம் கொடுத்திருக்காங்க இல்லே...''

''ஆமாம்...''

''அதற்கு எதிர்ப்பு தெரிவித்து ஒரு 'புயலே' கிளம்பியிருக்கு!'' —இளைதுக்கடவு ரவி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

க்குவது அங்கு வழக்கம்தானாம்! யாரும் இதைப் பொருட்படுத்துவது இல்லையாம்!

## 13. பாலைவனச் சோலை

**பா**லை நிலமான அஜர்பைஜான் குடியரசின் தலைநகரம் பாகுவை நோக்கி ரயில் விரைந்து கொண்டிருந்தது. வழியில் தென்பட்ட கிராமங்களைக் கவனித்தேன். ஒவ்வொன்றிலும் பத்துப் பதினைந்து வீடுகள் தென்பட்டன. ஓட்டுக் கூரை வேய்ந்த வீடுகள், அல்லது சின்னஞ் சிறு தார்சுக் கட்டிடங்கள். வீடுகளைச் சுற்றியோ அல்லது வீடுகளுக்கு அருகிலோ மறவாமல் மரங்களையும் செடி கொடிகளையும் நட்டு வளர்த்திருந்தார்கள்.— கிராமங்களைத் தாண்டினால் மீண்டும் மணற் பரப்போ, மணல் மேடுகளோ கொண்ட பாலைவனந்தான்.

பாகு நெருங்கிக் கொண்டிருந்தது. மணல் வெளிகளில் இரும்புக் கோபுரங்களும் இரும்புத் தூண்களும் தென்பட்டன. 'மின்சார நிலையங்கள் போலும்' என்று முதலில் நினைத்தேன். ரயிலுக்குள் வீசிய காலைக் காற்றில் பெட்ரோல் வாடை வீசுவதைச் சுவாசித்த பிறகுதான் அவை பெட்ரோலியம் எடுக்கும் இடங்கள் எனப் புரிந்து கொள்ள முடிந்தது.

அடுத்தாற்போல் புறநகர்ப் பகுதிகளில் பெரிய பெரிய மோட்டார் தொழிற்சாலைகள் தென்பட்டன. ஒரு தொழிற்சாலைக்கு வெளியே வரிசை வரிசையாகப் புத்தம் புதிய லாரிகள். அடுத்த தொழிற்சாலைக்கு வெளியில் நாற்பது ஐம்பது வாடகைக் கார்கள். காரின் மேலுள்ள அடையாளச் சின்னங்களைக் கொண்டே எது தனியாருக்குச் சொந்தமான கார், எது வாடகைக் கார் என்று சொல்லிவிடலாம். உற்பத்தி செய்து வண்ணம் பூசும் கட்டத்திலேயே அங்கு கார்களை இப்படிப் பிரித்து விடுவார்கள் என்பது தெரிந்தது.

ரயிலுக்கு வெளியே ஒரு புறத்தில் மணல் வெளி மறைந்து கடல் ஒன்று தென்பட்டது. அதுதான் காஸ்பியன் கடல். அந்தக் கடலுக்குள்ளே ஏராளமான எண்ணெய் வயல்கள் உள்ளன என்று கேள்விப்பட்டிருந்தேன். கடலுக்கு மேலே இரும்புப் பாலம் 17 கிலோ மீட்டர் தூரத்துக்குப் போட்டிருக்கிறார்கள். கடலுக்குள் தொலைவில் அங்கங்கே பெட்ரோலியம் எடுப்பதற்காக எழுப்பப்பட்ட இரும்புக் கோபுரங்கள் தெரிந்தன.— என்னுடைய வியப்பு அடங்குவதற்கு முன்பே நாங்கள் பாகுவின் ரயிலடிக்கு வந்து சேர்ந்தோம்.

நகரத்துக்குள் நாங்கள் காரில் வரும் போது, நான் எதிர்பார்த்து வந்த நகரம் வேறாகவும் கண்ணால் கண்ட நகரம் வேறாகவும் இருந்தது. மணல் பரப்பும் மணல் மேடுகளும் கொண்ட பாலைவனத்து நகரத்தை நான் எதிர்பார்த்தேன். பாகு என்னை ஏமாற்றி விட்டது. திரும்பிய பக்கமெல்லாம் சோலைகள் தென்பட்டன!

எங்களை வரவேற்று அழைத்து வந்த உள்ளூர் புகைப்பட நிபுணர் அரிஃப் என்பவரிடம், ''அப்படியானால் இது பாலைவனமில்லையா?'' என்று கேட்டேன்.

''ஆமாம். உண்மைதான். ஓர் அங்குல நீளமுள்ள புல்கூட இங்கு இயற்கையாக முளைப்பதில்லை'' என்றார்.

''அப்படியானால்?''

அவர் சிரித்தார். நான் புரிந்து கொண்டேன்.

பக்கத்துக் குடியரசான ஜார்ஜியாவில் ஓடும் குவா நதி நீரையும் மற்றொரு நதி நீரையும் பாகுவுக்குத் திருப்பி விட்டு, பல்லாயிரக் கணக்கான மரம் செடி கொடிகளை அங்கே நட்டு வைத்து, அதைப் பசுமை குலுங்கும் சோலை வனமாகவே மாற்றியமைத்து விட்டார்கள். பாலை, சோலையாக்கப்பட்டு விட்டது.

புதிதாகக் கட்டப்பட்டிருந்த 'ஹோட்டல் மாஸ்கோ'வுக்கு நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம். காஸ்பியன் கடற்கரை அருகில் ஒரு குன்றின் மேல் எழுப்பப்பட்ட ஐந்து நட்சத்திர ஹோட்டல் அது. 13வது மாடியிலிருந்த என் அறைக்குச் சென்று, கண்ணாடிச் சுவருக்குப் பின் தொங்கிய திரைச்சீலையை ஒதுக்கி விட்டேன். காஸ்பியன் கடல், கடற்கரைச் சோலை பாகு நகரத்தின் தோற்றம் யாவும் பளிச்செனத் தெரிந்தன.

அறைக்குள்ளே 'டெலிவிஷன்', 'ஃப்ரிட்ஜ்' 'ஏர் கண்டிஷன் சாதனம், வானொலி, படுக்கை அறையில் ஒரு தொலைபேசி, குளிக்கும் அறையில் ஒரு தொலை பேசி— இப்படி ஏகப்பட்ட வசதிகள். அவற்றில் தொலை பேசியைத் தவிர வேறு எதையும் பயன்படுத்த எனக்கு விருப்பமில்லை, நேரமுமில்லை. கண்ணாடிக் கதவைத் திறந்து விட்டு, மாடியின் பால்கனியிலிருந்து நகரத்தை மீண்டும் ஒரு முறை பார்த்தேன். கடற் காற்று குபுகுபுவென்று அறைக்குள் பாய்ந்தது.

(தொடரும்)

---



மாமேதை மணிமொழி:

### அரசாங்கத்தின் கடமை

மனிதன் வாழ்வது தனக்காகத்தான்; அரசாங்கத்துக்காக அல்ல. அரசாங்கம் தனி மனிதனின் நலனுக்காகவே வாழ்கிறது.




## சாண்டில்யன்

### அத்தியாயம் 19

### புதுப் புயல்

**கா**ற்றின் வேகத்தில் பலமாக அசைந்த கப்பலின் ஆட்டத்தில் கூரையில் அனந்த் பிணைத்த பவர் விளக்கு தலைக்கு மேல் இரு புறமும் வெகு வேகமாக ஆட, அவர்களிருவரும் அறியாமலே லேசாகத் திறந்த கதவின் மேலிருந்த இடுக்கின் வழியாக உஸ்ஸென்று நேராக வீசிய காற்று கன்னென்று அவளது அழகிய வதனத்தில் உதைக்க, அதே காற்றினால் அலைக்கப்பட்ட முன்னுச்சி மயிர்கள் நான்கைந்து முடிப்பிலிருந்து பிரிந்து அவள் நுதலில் அலைய, இரு கைகளையும் அனந்த் வைத்துக் கொடுத்தபடி காகிதத்தில் இரு மூலைகளிலும் பதித்த வண்ணம் காகிதத்தில் தீட்டப்பட்டிருந்த படத்தையும் குறிப்புக்களையும் பார்த்த கடல் ராணியின் கண்கள் மட்டுமின்றி உள்ளமும் அவற்றில் ஈடுபட்டு விட்டதால், அனந்த் முணுமுணுத்த தகவலை அவள் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. கசங்கிய நிலையிலும் அந்தக் காகிதம் சொன்ன கதை மிகப் பிரமிப்பாயிருந்தது அவள் சித்தத்துக்கு.

காகிதத்தில் மேலைக் கடலோரத்தின் படம் நல்ல கருத்த மையைக் கொண்டு மிகத் தெளிவாக வடக்கே தப்தி நதியின் முகத்துவாரத்திலிருந்து தெற்கே கார்வார் துறைமுகம் வரையில் தீட்டப்பட்டிருந்தது. அந்தப் பகுதியில் உள்ள ஒவ்வொரு துறைமுகமும், கோட்டையும் மேற்குத் தொடர்ச்சி மலையைக் குடைந்து கொண்டு கடல் உட்புகுந்துவிட்ட இடங்களும், சின்னஞ் சிறு கோடுகள் மூலமும் சித்திரங்கள் மூலமும் விவரமாகக் குறிப்பிடப் பட்டிருந்தன. எந்தெந்த இடத்தில் எந்தெந்த அரசின் ஆதிக்கம் ஓங்கியிருக்கிறது என்பதை வலியுறுத்த அந்தந்த நாட்டுக் கொடிகள் இரண்டொரு கோடுகளால் காட்டப் பட்டிருந்தன. போர்க் கப்பல்கள் எண்ணிக்கையைக் குறிக்க அந்தந்தத் துறைமுகத்துக்கு எதிரே ஒரு சிறு கப்பலைப் போட்டு, அதில் நான்கு, ஐந்து என்று எண்கள் எழுதப்பட்டிருந்தன. அந்தப் படத்தை ஒரு முறை பார்த்ததுமே மேலைக் கடலோர சக்தியின் விவரத்தை முழுவதும் புரிந்து கொண்டாள் ராணி. அவளுக்கு அதில் முக்கால்வாசிக்கு மேல் தெரிந்திருந்தாலும் தெரியாத பல விவரங்களும் அந்தப் படத்தில் அடங்கியிருந்ததால் நீண்ட நேரம் அதை ஆராய்ந்தாள்.

அவள் ஆராய்ச்சியைக் கவனித்த அனந்தின் முகத்தில் திருப்தியின் சாயை பெரிதும் பரவியது. அவள் பக்கத்திலிருந்த அவன் அந்த இடத்திலிருந்து விலகி அவள் நாற்காலியின் பின்புறம் வந்து குனிந்து அவள் கைகளின் இடத்தில் தனது கைகளை வைத்துக் காகி

தத்தை அழுத்தி, ''இனி நீ கைகளை எடுத்துவிடு. உன் ஆராய்ச்சிகளை நன்றாகச் செய்யலாம்'' என்றான்.

அவன் நாற்காலிக்குப் பின்னால் வந்தது, குனிந்தது, ஒரு தோளின் மீது தன் கன்னத்துடன் அவன் கன்னம் இழையும்படியாக முகத்தை வைத்துக் கொண்டது, தன் கை மீது அவன் கைகளை நீட்டிக் காகிதத்தைப் பற்றியது, இந்தச் செயல்களால் சற்று முன்பு நெகிழ்ந்துவிடக் கூடிய நிலையிலிருந்த ராணி, அப்பொழுது எந்த வித உணர்ச்சியுமில்லாத மரக் கட்டையாக இருந்தாள். அவள் தலை திரும்பவில்லை, அவனை நோக்கவில்லை, கண்கள் மயக்கமாகப் பார்க்கவுமில்லை. ஈட்டிக் கண்கள் காகிதத்தை ஆராய்ந்தன. அவன் உராய்ந்த கன்னத்தை அவள் விலக்கவில்லைதான்: ஆனால் அந்தக் கன்னத்தில் பழைய உணர்ச்சி, பழைய துடிப்பு அப்பொழுது இல்லை. கடல் ராணி மீண்டும் பழைய கொள்ளைக்காரியானாள். மேலைக் கடலோரக் கோட்டைகள், பிரிட்டிஷ் கப்பல்களின் தொகை, இவற்றில் லயித்திருந்தது அவள் புத்தி.



அந்த வெறியில் அவள் தனது வலது கை ஆள் காட்டி விரலால் அந்தப் படத்தின் ஒவ்வொரு இடத்திலும் ஏதோ கண்டுபிடிக்க முயல்வது போல் தடவினாள். சில இடங்களில் விரலின் அசைவைத் தேக்கினாள். இன்னும் சில இடங்களில் விரலை நெட்டுக் குத்தாக நிறுத்தி அழுத்தினாள். கொலாபாக் கோட்டையிலிருந்தும் அதற்குக் கீழே தொலை தூரத்திலிருந்த விஜயதுர்க்கத்திலிருந்தும் கடலில் மேற்கு நோக்கி இழுக்கப்பட்ட இரண்டு நீண்ட கோடுகளையும் தடவினாள் ஒரு முறை. பிறகு கடைசியாக சிந்து துர்க்கத்திலிருந்து மேல் திசையில் இழுக்கப்பட்ட இன்னொரு கோட்டையும் ஒரு சதுரத்தையும் விரலால் குறித்தாள். புரிந்ததற்கு அறிகுறியாகத் தலையைத் திருப்தியுடன் அசைத்தாள்.

அவள் கையசைவு, விரலசைவு, இரண்டையும் அவன் தோளில் பதிந்த முகத்துடன் கவனித்த அனந்த் அவள் தலையசைப்பைத் தன் கன்னத்துடன் உராய்ந்த அவள் வழவழுத்த கன்னத்தால் புரிந்து கொண்டதால் அந்த நிலையிலிருந்தே கேட்டான், ''ராணி! உனக்குத் திட்டம் புரிகிறதல்லவா?'' என்று.

ராணி காகிதத்திலிருந்து கண்களை நீக்காமலே சொன்னாள்: ''ஓரளவு புரிகிறது. திட்டத்தை விட வேறொன்று நன்றாகப் புரிகிறது'' என்று.

அனந்த் வியந்தான் அவள் பதிலைக் கேட்டு. ''எது நன்றாகப் புரிகிறது?'' என்று வினவினான்.

''உங்கள் நண்பர்....'' வாசகத்தை முடிக்கவில்லை அவள்.

''துலாஜி ஆங்கரே. ஆம். அவனுக்கென்ன?'' என்று வினவினான் அனந்த்.

''ஒன்று பைத்தியமாயிருக்க வேண்டும் அல்லது மூர்க்கராயிருக்க வேண்டும்'' என்றாள் ராணி.

''இரண்டுமில்லை ராணி. துலாஜியை விட நிதானமுள்ளவன் மேலைக் கடலோர மாலுமிகளில் யாருமில்லை. அவனை விடத் தெளிவான சிந்தனையும் யாருக்கும் கிடையாது'' என்று திட்டமாகச் சொன்னான் அனந்த்.

''அப்படியானால் இந்தப் படத்தின் திட்டம் எப்படி வந்தது? யாரால் வந்தது? யார் மூளையில் இது உருவாயிற்று?'' என்று வினவினாள் ராணி.

''இன்று மகாராஷ்டிரத்தின் இணையற்ற வீரனிடமிருந்து. மகா மேதையிடமிருந்து.'' அனந்த் பெருமையுடன் சொன்னான் இதை.

''இத்தனை அடைமொழிகளா உங்கள் நண்பருக்கு?'' ராணியின் கேள்வியில் இகழ்ச்சி இருந்தது.

''ஆம்.''

''இதுவரை அவர் என்ன சாதித்திருக்கிறார்?''

''எதுவும் சாதிக்கவில்லே.''

''ஏன்?''

''சாதிக்க அனுமதிக்கப்படவில்லே.''

''யாரால்?''

''அவர் தந்தையால். பேஷ்வா பாஜிராவால்'' என்ற அனந்த். ''ராணி! மகாராஷ்டிர ஸார்கேல் கனேஜி ஆங்கரே இணையற்ற கடல் வீரர். சாதிக்க முடியாத காரியங்களைச் சாதித்திருக்கிருர். இன்றும் இந்த அரபிக் கடலே ஆள்வது அவரது படைதான். ஆனால் வயது அவரது துணிவைக் குறைத்திருக்கிறது. அவர் மனம் இப்பொழுது சமாதானத்தையும் சாந்தியையும் நாடுகிறது'' என்றும் கூறினன்.

கடல் ராணியின் இதழ்கள் மிருந்த இகழ்ச்சியுடன் மடிந்தன ஒரு முறை. பிறகு அவள் அனந்தை நோக்கத் தனது தோளிலிருந்த அவன் தலேயை அகற்றித் திரும்பி உட்கார்ந்து நோக்கினள். ''இந்த துலாஜி ஆங்கரே, கனேஜி திருமணம் புரிந்து கொள்ளாத காதலி மகன், கனேஜியைவிடக் காரியங்களைச் சாதிக்க முடியு மென்பது உங்கள் நினைப்பா?'' என்று கேட்டாள் இகழ்ச்சிக் குரலில் துலங்க.

அனந்த் அவள் இகழ்ச்சியைக் கவனித்தாலும் அதைப் பொருட்படுத்தவில்லே. அவன் கண்கள் துலாஜியைப் பற்றி அவள் கேட்ட கேள்வியால் உக்கிரமாகப் பளிச்சிட்டன. ''நினைப்பல்ல ராணி, நம்பிக்கை. முழு நம்பிக்கை. இப்பொழுது மகாராஷ்டிரத்தைக் காப்பாற்றக் கூடியவர் இருவர். ஒருவர் பேஷ்வா பாஜிராஜ், திலத்தில். இன்னொருவர் துலாஜி, நீரில். ஆனால் இருவரும் நேர் எதிராக நிற்கிருர்கள். கனேஜியிடம் பேஷ்வாவுக்குள்ள மதிப்பு துலாஜியிடம் உள்ள நட்பை விட, நம்பிக்கையை விட, பலமுறை சிறந்தது. அதனால் துலாஜியைச் சுதந்திரமாக உலாவ விட பேஷ்வா மறுக்கிருர். ஆகையினுல்தான் துலாஜி தானுகவே முயற்சி எடுக்கிருன்....'' என்று சொல்லிக்கொண்டு போன அனந்தின் சொற்களே இடையில் வெட்டிய ராணி, ''பிரிட்டிஷ் கடல் பலத்தை ஒடுக்க'' என்று முடித்தாள்.

அவள் அதை இகழ்ச்சியுடன் சொன்னுலும் அதைப் பற்றி அனந்த் சிறிதும் கவலேப்படவில்லே. ''ராணி! முயற்சிகள் பயனளிக்கும் வரை எந்த மனிதனேயும் உலகம் ஒப்புவதில்லே. துலாஜியை விடச் சிறந்தவர்களே யெல்லாம் பார்த்து உலகம் நகைத்திருக்கிறது. அதே உலகம், சிலரை அவர்கள் இருக்கும்போதும், சிலரை இறந்த பின்பும் உச்சாணிக் கொம்பில் ஏற்றி வைத்துக் கொண்டாடி யிருக்கிறது. துலாஜியை உலகம் புரிந்து கொள்ளும் காலம் வரும்'' என்று கூறிய அனந்த், ''துலாஜியைப் பற்றிய சர்ச்சை கிடக்கட்டும். உன் உதவி எங்களுக்கு உண்டா இல்லேயா?'' என்று வினவினன்.

ராணி பதில் சொல்லவில்லே. மீண்டும் காகிதத்தை நோக்கினள். சில நிமிட மௌனத்துக்குப் பிறகு ''கொலாபாவிலிருந்தும் விஜய துர்க்கத்திலிருந்தும் மேற்கே இழுக்கப்பட்ட கோடுகளிலிருந்து, இந்த இரண்டுக்கும் இடையில் உள்ள கடல் பகுதியில் நீங்கள் பிரிட்டிஷ் கப்பல்களே மடக்கப் பார்க்கிறீர்கள் என்று புரிகிறது. அதற்கு உங்களுக்கு ஒரு தளம் வேண்டும். அது சிந்து துர்க்கம்' அதற்காகத்தான் சிந்துதுர்க்கத்துக்கு எதிராக ஒரு சதுரம் போட்டிருக்கிறீர்கள். அந்த மாதிரி சதுரம் வேறெங்கும் இல்லே'' என்று கூறினள் ராணி.





''நல்ல ஜலதோஷம்... மூக்கு ஒழுகிகிட்டே இருக்கு. அதான் வாடகை வசூல் பண்ண வர முடியலே!''
''உங்க வீட்டுக்கும் நல்ல ஜலதோஷம்! வீடு பூரா ஒழுகி கிட்டே இருக்கு... அதான் வாடகை தர முடியலே!''

---

அவள் கூறிய அறிவைக் கண்டு வியந்தான் அனந்த். அவள் கப்பலோட்டுவதில் திறமைசாலியென்று கேள்விப் பட்டிருக்கிறான் அவன். அவள் கப்பல் போரிலும் சாமானியப்பட்டவள் அல்ல வென்பதும் பிரசித்தம். சிந்துதுர்க்கத்தைத் தாக்க வந்த இரண்டு வெள்ளைக் கொள்ளைக் கப்பல்களை அவளே தனது கப்பலைக் கொண்டு தாக்கி அவற்றைச் சூறையாடிக் கொளுத்தி யிருக்கிறாள் என்றும் அனந்த் கேள்விப் பட்டிருக்கிறான். ஆனால் அவள் துணிவுள்ள ஒரு கொள்ளைக்காரியே தவிர பெரிய கடற் போர் மர்மங்களை உணரக் கூடிய, பெரும் திட்டங்களைப் புரிந்து கொள்ளக் கூடிய, ஒரு தலைவி என்று அவன் அன்றுவரை நினைக்கவில்லை யாகையால் அவளைப் பெரு மதிப்புடன் நோக்கினான். ''ராணி! உன் துணிவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஸ்டாண்டனும், ஸ்மித்தும் உன்னைப் பிடித்துச் செல்ல வந்த போது நீ காட்டிய அலட்சியத்திலிருந்து உன் துணிவைப் புரிந்து கொண்டேன். நீ இந்த காலண்ட்ராவுக்கு வர ஒப்புக் கொண்டதும் உனக்கும் அச்சத்துக்கும் நெடுந்தூரம் என்பதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டேன். ஆனால் உனக்குப் பெரும் ராணுவப் படங்களை ஆராய முடியும் என்பதையும் அதன் நுட்பங்களைப் புரிந்து கொள்ள முடியும் என்பதையும் இப்பொழுதுதான் தெரிந்து கொண்டேன். நீ பெண். அதுவும் சிறியவள். அப்படி யிருந்தும் உன் அறிவும் துணிவும் மகத்தானவை. துலாஜிக்கு நீ சரியான ஜோடி'' என்று பாராட்டினான் அனந்த்.

இதைக் கேட்ட ராணியின் முகம் சிவந்தது கோபத்தில். அவனைப் பார்த்த விழிகள் நெருப்பைக் கக்கின. ''ஏன் ராணி? என்ன?'' என்று அச்சத்துடன் வினவினான் அனந்த்.

''என்ன சொன்னீர்கள்? துலாஜிக்கு நான் சரியான ஜோடியா?'' என்று சீறினாள் ராணி.

அவள் சினத்துக்குக் காரணம் புரிந்ததால் சங்கடத்துக்குள்ளான அனந்த், ''சேச்சே! ராணி! தப்பாக நினைக்காதே.... நான்....'' என்று இழுத்தான்.

''உளறிவிட்டீர்கள்'' என்று ராணி அவன் வார்த்தையை முடித்தாள்.'' எந்த அறிவாளியும் சில சமயங்களில் அசட்டுத்தனத்தைக் காட்டுகிறான்'' என்றும் கூறினாள்.

''ஆம் ஆம்'' என்று தனது அசட்டுத்தனத்தை இரு முறை ஆமோதித்த அனந்த், ''ராணி! இது சாதாரண போர்த் திட்டமல்ல. துலாஜி இட்டிருக்கும் இந்தத் திட்டம் நிறைவேறினால் உன் பெயர் சரித்திரத்தில் நிலைக்கும். நீ உண்மையாகவே கடல் ராணியாவாய்'' என்று உற்சாகத்துடன் கூறினான்.

''நான் சரித்திரப் பாத்திரமாக இஷ்டப்படாவிட்டால்?'' என்று ராணி வினவினாள்.

''நான் வருத்த மடைவேன்'' என்றான் அனந்த்.

''நீங்கள் எதற்காக வருந்த வேண்டும்? என் பெயரை அழித்து விட்டு நீங்கள் கடல் ராஜாவாகலாம். சரித்திரத்தில் பாதி பொய். எல்லாம் புருஷர்களால் எழுதப் பட்டது. ஒரு பெண்ணின் துணையின்றி, அவள் தரும் ஊக்கமின்றி எந்த ஆடவனும் பெரும் செயல்களைச் செய்தது கிடையாது. ஆனால் நூற்றுக்கு ஒரு பெண் கூட சரித்திரத்தில் இடம் பெறுவதில்லை. புருஷர்களுடைய அசாதாரணச் செயல்கள்தாம் எழுதப் பட்டிருக்கின்றன. காரியம் ஆக வேண்டுமென்றால் எந்த ஆண் மகனும் பெண்ணின் காலைப் பிடிக்கிறான்'' என்றாள் ராணி வெறுப்புடன்.

''சரி ராணி! நான் உன் காலைப் பிடிக்கிறேன்'' என்று சொன்ன அனந்த் அவள் பாதங்களை நோக்கிக் கையைத் தொங்கவிட்டான். அவன் கையை இடையிலேயே தன் கையால் பிடித்து நிறுத்திய ராணி, ''இந்த ஏமாற்று வித்தையெல்லாம் என்னிடம் வேண்டாம். நீங்கள் என்னிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? திட்டமாகச் சொல்லுங்கள்'' என்றாள்.

அனந்த் அவளுக்குப் பின்புறத்திலிருந்து நீங்கி எதிரே வந்து நின்று அவளை நோக்கினான். ஊசலாடிய விளக்கின் ஒளி அவன் முகத்தின் கம்பீரத்தைப் பன்மடங்கு அதிகப்படுத்திக் காட்டியது. விளக்கின்

---

மாமேதை மணிமொழி :



## செல்வம்

உங்களிடம் செல்வ மிருக்குமானால் அது தற்செயலாக ஏற்பட்ட நிகழ்ச்சி என்பதனை நினைவில் கொள்ளுங்கள். இந்தத் தற்செயல் நிகழ்ச்சி நீடித்து நீண்ட காலமிருக்கக் கடவுள் அனுமதிக்க மாட்டார். எனவே கையில் பணமிருக்குமானால் நல்ல பணிகளுக்குச் செலவிடுங்கள்.

# கார்னெகீ அரங்கில்

# எம்.எஸ்.



உடன் பாடுபவர்:

**ராதா விஸ்வநாதன்**

பக்க வாத்தியங்கள்:

**கண்டதேவி அழகிரிசாமி**
(வயலின்)

**குருவாயூர் துரை**
(மிருதங்கம்)

இசை அரசி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள், பரவசமாய்ப் பாடிய பக்திப் பாடல்கள் பலவற்றின் மற்றுமொரு தொகுப்பு—அமெரிக்காவிலும் கானடாவிலும் செய்த சுற்றுப்பயணத்தின்போது, உலகப் புகழ் பெற்ற நியூ யார்க் கார்னெகீ அரங்கில் பாடிய பாடல்களின் நேரடிப் பதிவு, மூன்று LP இசைத்தட்டுகளாக வெளியிடப்பட்டுள்ளது.

எம்எஸ்ஸின் இனிய இசை கேட்டு இன்புற, இந்த இசைத்தட்டுகள் எங்களுடைய காணிக்கை.




ஒலிமயமான எதிர்காலம்

தி கிராமபோன் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

GCI-2193

ஆட்டத்தில் மாறி மாறி வந்து அவன் முகத்தைத் தாக்கிய வெளிச்சம் அவன் உள்ளத்திலும் வேகமாக ஆடும் எண்ணங்களுக்குச் சான்று கூறியது. ஆடிய அறையில் கால்களைத் திடமாக ஊன்றிய வண்ணம் இந்திரஜித் அனந்த் கேட்டான், ''கவர்னர் சார்லஸ் பூன் உனக்குத் தெரியுமா?'' என்று.

ராணி பெரிதாக நகைத்தாள். ''அந்த முட்டாளைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேன்'' என்றாள் நகைப்பின் ஊடே.

அனந்த் அவள் நகைப்பையும் ரசிக்கவில்லை, பேச்சையும் ரசிக்கவில்லை. ''யாரைப் பற்றியும் மட்டமாகப் பேசாதே ராணி. பூன் முட்டாளல்ல. அவர் திட்டம் சரிதான்'' என்று கூறினான் அனந்த்.

''தவறாகச் சொல்கிறீர்கள். கவர்னர் அதிகப்படுத்தியது ஆங்கிலேயர் கடல் பலத்தை அல்ல. கப்பல் பலத்தை. கப்பல்களைக் கட்டுவது வேறு, அவற்றை இயக்குவது வேறு'' என்று அனந்தைத் திருத்திய ராணி, கண்ணை மூடிக் கொண்டு மேலும் பேசினாள், கனவில் பேசுவது போல்: ''பழைய கவர்னர் ஐஸ்லாபி மகாராஷ்டிரருடன் சமாதானத்தை விரும்பினார். ஓரளவு அதில் வெற்றியும் அடைந்தார். ஆனால் அது போதவில்லை அந்த வர்த்தக நாட்டுக்கு. இந்தப் பைத்தியம் பூனை அனுப்பி வைத்தார்கள். பூன் தனியாக வரவில்லை. தன்னுடன் இங்கிலாந்திலிருந்தே ஆலோசகர்களையும் அழைத்து வந்தார். வந்ததும் கப்பல்களைக் கட்ட ஆரம்பித்தார். இப்போதுகூட நினைத்துப் பார்க்கிறேன். மொத்தம் இருபத்தியொரு கப்பல்கள். * என்ன பெயர்கள்! அப்பப்பா! விக்டரி, பிரிட்டானியா, ரிவெஞ்ஜ், பேம், ஹாக், ஈகிள், பிரின்ஸஸ் அமீலியா, டிபயன்ஸ், டிரேக், லைமாண்டர், ஹண்டர், ஆண்டிலோப், ஹௌண்ட், டைகர், ப்ளை, ஸ்விப்ட், பெரட், வீஸல், ஸ்குவிரல், லெபேர்ட், டெரிபின் பாம், இந்தப் பெயர்களில் அடங்காதது கிடையாது. புலியிலிருந்து கழுகுவரை, அணிலிலிருந்து பழி வாங்குதல் (ரிவெஞ்ஜ்) வரை, ஈயிலிருந்து பயங்கர வெடி குண்டு வரை, எல்லாம் இருக்கின்றன. பெயர்கள் ஜெயிக்குமானால் பிரிட்டிஷ் ஆட்சியை இங்கு நிறுவியிருப்பார் பூன். அது முடியவில்லை. பதிலுக்கு பிரிட்டிஷாருக்கு அவமானத்தைத்தான் நிறுவினார்.''

இப்படிப் பேசிய ராணி சிறிது நிதானித்தாள். ''ஆனால் ஒரு நல்லதும் செய்தார் இந்த நாட்டுக்கு. அதன் சக்தியை, மகாராஷ்டிரத்தின் வலுவை, கனோஜியின் பலத்தைத் தெரியப்படுத்தினார். அது மட்டுமல்ல,

* Kanhoji Angrey – Maratha Admiral – By Manohar Malgonkar –Page 206



நண்பர்: ''ஏராளமா செலவு செய்து ஒரு கலர்ப்படம் எடுத்தீங்களே என்ன ஆச்சு?''

தயாரிப்பாளர்: ''ஏகப்பட்ட நஷ்டம். எல்லா பிலிம்களையும் விற்றுச் சாயக்கடை ஒன்று ஆரம்பிக்கப் போகிறேன்!'' —எஸ். ஸ்ரீதர்

எட்டு ஆண்டுகளுக்கு முன்பு. அதாவது 1918 ஆங்கில ஆண்டில் காண்டேரித் தீவில் நடந்த அதிசயம்! காண்டேரிக் கோட்டையில் மங்கோஜி சூர்யவம்சியின் தலைமையில், ஆண்களோடு பெண்களும் துப்பாக்கி தாங்கி, பீரங்கி இயக்கிச் சரிசமமாகப் போரிட்ட விந்தையை யார் மறக்க முடியும்? மகாராஷ்டிர மங்கையர் அன்று காட்டிய வீரம் கவர்னர் பூனையும் அவர் பெரும் படையையும் விரட்டி விட்டது இந்நாட்டின் மறக்க முடியாத சரித்திரம்'' என்று சொன்ன ராணியின் முகத்தில் வீரக்களை சொட்டியது. முகம் பெருமிதத்தால் மலர்ந்தது.

அவள் சொன்னபடிதான் சகலமும் நடந்திருந்தது. ஆனால் மேலைக் கடற் பகுதியின் தெற்கு ஓரத்தில் இருக்கும் ராணி பெரிய தளபதிகளே முற்றும் அறியாத தகவல்களைத் தெரிந்து வைத்திருந்ததைப் பற்றி வியப்படைந்தான் அனந்த். ஆகவே, தலையை அசைத்தான் ஆமோதிக்கும் வகையில். அப்படி ஆமோதித்து விட்டுச் சொன்னான், ''ராணி! நீ சொன்னபடிதான் சகலமும் நடந்திருக்கிறது. ஆனால் முற்றும் கவர்னர் பூனின் தவறல்ல. நீ குறிப்பிட்ட போரில் உன்னிடம் சிறைப்பட்டுள்ள மேஜர் ஸ்டாண்டனும் இருந்திருக்கிறான். அவனைப் போன்ற உதவாக்கரைகள் பலர் இருந்தார்கள். ஆகையால் திறமையற்ற கடற்படைத் தலைவர்களும் பூன் தோல்விக்குக் காரணம்'' என்று கூறினான். அத்துடன் சொன்னான்: ''உனக்கு இன்னொரு செய்தியும் இருக்கிறது ராணி'' என்று.

''என்ன?'' என்று ராணி வினவினாள்.

''கவர்னர் பூன் சென்ற ஜனவரி கடைசியில் இங்கிலாந்துக்குச் சென்று விட்டார்'' என்று அறிவித்தான் அனந்த்.

இந்தச் செய்தி ராணிக்குப் புதிதானதால் ''அப்படியா? நம் வேலை குறைகிறது'' என்றாள்.

''இல்லை ராணி. அதிகமாகிறது, கடுமையாகிறது. கவர்னர் பூன் சென்றுவிட்டாரே

மாமேதை மணிமொழி :

## சமூக சீர்திருத்தம்



நமது சமூக ஆசாரங்களிலும் பழக்க வழக்கங்களிலும் எத்தனையோ தீமையான அம்சங்கள் இருக்கின்றன. அவற்றை மாற்ற வேண்டியதுதான். ஆனால் அந்த ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் ஏற்படுத்திய நமது முன்னோர்களை நாம் குறை கூற வேண்டியதில்லை. அந்தக்காலத்தில் அவைகளுக்கு ஏதோ உபயோகம் இருந்திருக்கலாம். தற்போது அவை நமக்கு விளங்கவில்லை யென்றால் அதற்காக முன்னோர்களை மூடர்கள் என்று சொல்ல வேண்டியதில்லை,




தவிர, கப்பல்கள் அப்படியே இருக்கின்றன. வந்திருக்கிற புதிய கவர்னர் வில்லியம் பிப்ஸ் மிக நிதானமுடையவர்'' என்றான் அனந்த்.

''அப்படியா?''

''ஆம். வந்திருக்கும் கவர்னர் மகாராஷ்டிரர் பாணியில் செயல்பட முயற்சி செய்கிறார். கனோஜியை மகாராஷ்டிர அரசு தன் பக்கம் இழுத்துக் கொண்டது போல் பிரிட்டிஷ் கொள்ளைக்காரர்களைத் தமது பக்கம் இழுக்கப் பார்க்கிறார். அவர் பக்கம் கொள்ளைக்காரர்கள் போய்விட்டால் பிரிட்டிஷார் வலுத்து விடுவார்கள். அதை நாம் தடை செய்ய வேண்டும்.''

''எப்படிச் செய்வதாக உத்தேசம்?''

''இந்தகாலண்ட்ராவிலிருக்கும் டெய்லர் இங்லண்ட், வில்வர் மூவரும்தான் பிரிட்டிஷ் கொள்ளைக்காரர்களில் பயங்கரமானவர்கள். இவர்களை நாம் நமது பக்கம் இழுத்துக்கொண்டால் மற்றவர்கள் கவர்னர் பக்கம் போக மாட்டார்கள்'' என்ற அனந்த் ராணியை உற்று நோக்கினான்.

ராணி புரிந்து கொண்டாள். ''நீங்கள் சிந்து துர்க்கம் வந்த காரணம் புரிகிறது. கொள்ளைக்காரியைக் கொண்டு கொள்ளைக்காரர்களை இழுக்கப் பார்க்கிறீர்கள். ஆனால் ஆனால்....''என்று சந்தேகத்துடன் பேசினாள் ராணி.

''சந்தேகத்துக்கு இடமில்லை. நீ சரியென்று சொன்னால் நான் அவர்களைச் சரிப்படுத்திவிட முடியும்'' என்றான் அனந்த்.

''எதற்குச் சரியென்று சொல்ல வேண்டும்? என்னிடம் எதை எதிர்பார்க்கிறீர்கள்?'' என்று ராணி கேட்டாள்.

வெளியே காற்று சிறிது குறைந்தது. முன்னை விடத் திடமாக நின்றான் அனந்த். ''ராணி! சிந்து துர்க்கத்தைக் காத்து நிற்க காலண்ட்ராவுக்கு அனுமதி கொடு'' என்று கேட்டான் முடிவில்.

அதுவரை நாற்காலியில் உட்கார்ந்திருந்த ராணி மிகுந்த கோபத்துடன் எழுந்தாள் நாற்காலியை விட்டு. ''என்ன கேட்டீர்கள்?'' என்று சீற்றம் மிகுந்த குரலில் வினவினாள்.

''காலண்ட்ரா சிந்துதுர்க்கத்தைப் பாதுகாக்கட்டும் என்று சொன்னேன்.'' அனந்தின் சொற்கள் சர்வ சகஜமாக உதிர்ந்தன.

''உங்களுக்கும் துலாஜியைப் போல் பைத்தியம்தான். என் கோட்டையை அணுக யாரையும் அனுமதிக்க மாட்டேன்'' என்றாள் ராணி.

''வருந்துகிறேன்'' என்றான் அனந்த்.

''எதற்கு?''

''உன் போக்குக்கு.''

''அதில் வருந்த என்ன இருக்கிறது?''

''அனுமதியுடனோ அனுமதி யில்லாமலோ கோட்டையை அணுக அவசியமிருக்கிறது'' என்றான் அனந்த்.

''பலவந்தமாகவா?'' ராணியின் குரல் கடுமையாக ஒலித்தது.

''ஆம்.'' சாந்தமாயிருந்தது அனந்தின் குரல். ஆனால் அதில் நிர்ணயம் பரிபூர்ணமாயிருந்தது.

அப்பொழுது யாரோ நகைத்தார்கள் கதவருகில். ராணியும் அனந்தும் ஏககாலத்தில் கதவை நோக்கினார்கள். வில்வர் நின்றிருந்தான் ஒரு கதவின் மேல்சாய்ந்து கொண்டு. அவன் தோளில் அந்த ராட்சதக் கிளி உட்கார்ந்திருந்தது.

''அனந்த் மை பாய்! ஐ ஆம் ப்ரௌட் ஆப் யூ'' என்றான் வில்வர்.

''எதற்கு?'' என்று கேட்டான் அனந்த்.

''சொன்னதைச் செய்ததற்கு'' என்றான் வில்வர். அவன் சொல்லில் விஷமமிருந்தது. உதட்டில் புன்முறுவல் இருந்தது.

''எதைச் செய்தேன்?'' என்று கேட்டான் அனந்த்.

''ராணியை மயக்கி நமது பக்கம் திருப்பியதற்கு'' என்றான் வில்வர்.

ராணி திகைத்தாள். ராணி என்ன அனந்தும் திகைத்தான்.

எரிகிற கொள்ளியை ஏறத் தள்ள வில்வர் சொன்னான்: ''நீ செய்ததில் தவறு ஏதுமில்லை. எவ்வரிதிங் ஈஸ் பேர் இன் லவ் அண்ட் வார்'' என்று சொல்லி மீண்டும் நகைத்தான் பெரிதாக.

வில்வரின் அயோக்கியத்தனம் எங்கோ தன்னைக் கொண்டு அழுத்தி விட்டதை அனந்த் உணர்ந்தான். இதுவரை ராணியிடம் தான் காட்டிய காதலைப் போலி என்று வெகு சாமர்த்தியமாக வில்வர் திருப்பி விட்டதை எண்ணி இடிந்து போனான் அனந்த். வேறு இடமாக இருந்தால் வில்வரைச் சுட்டுப் போசுக்கியிருப்பான் அவன். ஆனால் அந்தக் கப்பலில் அந்த நிலையில் ஏதும் செய்ய வகையின்றி நின்றான். வில்வர் உற்பத்தி செய்த புதுப் புயல் வெளியே வீசிய புயலை விடப் பன்மடங்கு வலுவாக அவனைத் தாக்கி எறிந்தது பலவாறாக. (தொடரும்)

மாமேதை மணிமொழி :



**பக்தி**

சில குடியானவர்கள் மாட்டுக்கு வைக்கோலுக்காகவே நெல்லைப் பயிர் செய்யலாம். ஆனால் நெல்லின் சிறந்த பயன் மக்களுக்கு வேண்டிய அரிசி. அதைப்போலவே நல்வழிக் காகத் தெய்வபக்தியை பயிர் செய்யலாம். ஆனால் பக்தியின் முக்கிய பயன் ஆண்டவனைக் காண்பதும் கண்டு ஆனந்த மடைவதும். வைக்கோலுக் கென்று பயிர் செய்தாலும் அரிசி உண்டாகுமல்லவா?

# ஒலியிலே கலைவண்ணம் காண்பீர்




# பிலிப்ஸ் ப்ரைடு

## 3-பாண்டு, சாலிட் ஸ்டேட் மெயின்ஸ் ரேடியோ

பிலிப்ஸ் ப்ரைடு (3-பாண்டு)

- டெக்ஸ்சுரைஸ்டு, 2-வண்ண பாலியஸ்டைரீன் காபினட்-அரக்கு கலை வண்ணங்கள் கொண்டது.
- உயர்ந்த ஒலித்திறன் வாய்ந்த ஓவல் ஸ்பீக்கர்—15 செ.மீ. x 10 செ.மீ.
- ஷார்ட் ஸர்க்யூட்டின் போது செட்டை மெயின்ஸிலிருந்து பிரித்துவிட தெர்மல் 'பாதுகாப்பு ஃப்யூஸ்'
- செவிக்கினிய நாதம் பெற பரவலான டோனல் வரிசை ரூ. 550/-*

**மேலானதை உங்களுக்கு வழங்குவதே எங்கள் நோக்கம்.**

# பிலிப்ஸ்

* சில்லறை விற்பனை உச்ச விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது. மாநில விற்பனை வரி மேலும் இதர தல வரிகள் தனி.




CASPR-427-203 TH



# காதல்

– செல்வமணி

போட்டிக் கதை-12

பலத்த ஆரவாரத்திடையே ராக்கெட்டை ஸ்டைலாகச் சுற்றியபடி டென்னிஸ் கோர்ட்டுக்கு நடந்து கொண்டிருந்தான் சுந்தரம். நேஷனல் சாம்பியன் ஷிப்பிற்கான இறுதிப் போட்டி இன்னும் ஐந்தே நிமிடங்களில் ஆரம்பமாக இருந்தது.

மூன்று வருடங்களுக்கு முன்பு டென்னிஸ் உலகில் உதய சூரியனாய்க் கிளம்பி, திடீரென்று வால் நட்சத்திரம் போல் மறைந்துபோன சுந்தரம் இப்போது மீண்டும் முன்பை விட உக்கிரமாய் ஆடிப் பல போட்டிகளில் வென்று கொண்டிருந்தான். இன்று இவன் ஃபைனல் வரை வந்திருப்பது கண்டு ''வால் நட்சத்திரம் மீண்டும் சூரியனாகிறது'' என்று ஒரு பத்திரிகையில் விமரிசித்திருந்த சுஜாதா, பார்வையாளர்களிடையே முன் வரிசையில் அமர்ந்திருந்தாள்.

கோர்ட்டுக்கு வந்து நின்று சுற்று முற்றும் பார்த்த சுந்தரத்தின் பார்வையில் சுஜாதா பட்டதும் அவனுள் இனம் புரியாத ஓர் அதிர்ச்சி அலையடித்தது. அவனது இதயம் இன்பமான வேதனையில் துடித்தது. வயிற்றினுள் 'குப்'பென்று ஏதோ பரவிச் 'சொரேல்' என்றது. அவளைத்தான் மனமார வெறுத்தும்கூட அவளைச் சந்திக்க, அல்லது பார்க்க நேரும்போதெல்லாம் இப்படி ஓர் எழுச்சி தன்னை அறியாமல் உருவாகித் தன் உடல் முழுதும் மின்சாரம் போல் உஷ்ணமாய்ப் பரவுவதை ஏனென்று அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவனுக்கே அடங்காமல், அவனையும் மீறி, அவனையே ஆட்கொள்ளும் அந்தக் காரணம் புரியாத படபடப்பும், எதிர்பார்ப்பும் அவனுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. ஆயினும் அதைத் தவிர்க்க அவனுக்குச் சக்தியில்லை.

சிந்தனையை ஆட்டத்தில் திருப்பி அதில் இணைந்துவிட முயன்றான் சுந்தரம். 'இந்தப் பையன்தான் எவ்வளவு திறமையாக ஆடுகிறான்!'

முதல் செட் விஜயகுமாருக்கு: 6—1.

சுந்தரம், 'இந்த சுஜாதா வந்ததால் தான் இப்படி கான்சென்ட்ரேஷன் இல்லாமல் ஆடுகிறேனோ?' என்று ஒரு கணம் யோசித்தான். திடீரென்று, 'இந்தப் பந்தயம் ஒன்றரை வருடங்களுக்கு முன்பு சுஜாதா விடுத்த சவாலுக்குப் பதில் தரக் கூடிய சந்தர்ப்பம் அல்லவா?' என்ற உணர்வு சாட்டையடி போல் தோன்றிய வேகத்தில் அவன் மனத்தில் பூத்த சிலிர்ப்பு அவனது உடலிலும் பரவியது.

விஜயகுமாரின் ஒவ்வொரு வீச்சும் சுஜாதாவின் கேள்விக் கணையாகச் சுந்தரத்துக்குத் தோன்றியது. தன் பலம், வேகம், விவேகம் அனைத்தையும் ஒன்றாக்கி ராக்கெட்டின் மூலம் வெளிப்படுத்திக் கொண்டிருந்தான் சுந்தரம். தன்னை நோக்கி வரும் பந்தை சுஜாதாவின் முகமாய் உருவகித்து அதனைச் சிதறடித்துச் சின்னாபின்னமாக்கினான். சுந்தரத்தின் உடலும், உயிரும், மனமும், அவனுள் இருந்த எல்லாமே டென்னிஸ் பந்தோடு ஒன்றிவிட்டிருந்தன. அவனுடைய வாழ்வே அந்தப் பந்தயத்தில் தான் இருப்பது போல் தீவிரமாய்ப் போராடினான்.

அது விளையாட்டா அல்லது உயிர்ப் போராட்டமா என்று பார்வையாளரைப் பிரமிக்க வைத்தது அவனது ஆட்டம்.

வீறு கொண்ட புலிபோல் அவன் கோர்ட்டின் முன்னும் பின்னும் குறுக்கும் நெடுக்குமாகப் பாய்ந்து பல அற்புதமான ஷாட்களை ஆடிக் காட்டியபோது, கூட்டம் அதிசயித்தது: ஆர்ப்பரித்தது: ஆனந்தம் கண்டது: வெறி கொண்டது.

அடுத்தடுத்து எல்லா செட்டுகளையும், ஒரு கேம் கூட இழக்காமல் சுந்தரம் வென்றான். கற்பனையை மீறிய அவனது திறமைக்கு அந்தப் பெருங் கூட்டம் தலை வணங்கியது. ஒவ்வொருவரும் சுந்தரத்தின் வெற்றியைத் தங்களுடையது போலக் கருதித் துள்ளி மகிழ்ந்தனர்.

பரிசளிப்பு — கைகுலுக்கல் — பாராட்டுகள்— மாலைகள் — ஆட்டோகிராஃப்கள் — ஃப்ளாஷ் பல்புகள் — கேள்வி பதில்கள் — உபசாரங்கள் விருந்து அழைப்புகள் — .

எல்லாம் முடிந்து காரில் திரும்பிக்கொண்டிருந்த நேஷனல் சாம்பியன் சுந்தரத்தின் மனத்தில் ஒரே பெயர், ஒரே உருவம், ஒரே நினைவு — சுஜாதா — சுஜாதா — சுஜாதா...

சுஜாதா எழுத்துத் துறையில், குறிப்பாக, விளையாட்டு விமரிசனத்தில் தன் முத்திரை

யைப் படித்து, வாசகர்கள் மனத்திலும் பதிந்திருந்தாள். சுந்தரம் டென்னிஸில் கொடி கட்டிப் பறக்கப் போகிறான் என்று ஊகித்துப் பாராட்டி அவள் எழுதியது, அவனுக்கு அவளை அறிமுகப்படுத்தியது. அவளது ஆட்டத்தில் அவன் மயங்கியதை விட அவளது பேச்சிலும், எழுத்திலும் அவன் அதிகமாய்க் கிறங்கிப் போனான்.

சுஜாதா பேரழகியல்லள். ஆனாலும் அறிவின் ஒளி அவள் முகத்துக்குத் தனிச் சோபை ஊட்டி, அவளைக் கவர்ச்சி நிறைந்தவளாக்கியிருந்தது. சுந்தரம் அவளது காதலைப் பெற முடிந்ததற்காகத் தன் அதிர்ஷ்டத்தை அடிக்கடி மெச்சிக் கொள்வான்.

கனவுகள் கலைய ஆரம்பித்தன. சுந்தரத்துக்கு ஆட்டத்தில் அடுத்தடுத்துத் தோல்விகள். சுஜாதா கவலை கொண்டாள்.

''சுந்தர்! உங்களுக்கு என்னதான் ஆயிற்று?'' என்ற அவளது கேள்விக்கு அலட்சியமான, பொறுப்பற்ற புன்னகையே பதிலாயிற்று. அவனது தோல்விகளை விட அதை அவன் ஏற்றுக் கொண்ட மனப்பான்மையே அவளை அதிக வேதனைக்குள்ளாக்கியது. தன்னை விட வயதிலும் அனுபவத்திலும் திறமையிலும் குறைந்த ஒருவனிடம் சுந்தரம்






எனது இயற்பெயர் வி. வி. சுப்பிரமணியன். நான் பிறந்த போது என் அன்னைக்குப் பணிவிடை புரிந்த நர்ஸ் செல்லமணியின் விருப்பத்திற்கிணங்க நான் செல்லமணியானேன்.

முப்பத்தொருவயதாகும் நான் தற்போது சென்னை தொலைக்காட்சி நிலையத்தில் Transmission Executive ஆகப்பணியாற்றுகிறேன். படிப்பு M.A., பொருளாதாரம்.

எழுத்துத்துறையில் சிறப்புப் பெறவேண்டும் என்பது என் ஆசை. அது வெறி யாகும் போது வெற்றி பெறுவேன் என நம்புகிறேன்.

நான் எழுத எனக்கு உற்சாகம் தருவது பெற்றோர் ஆசியும், தொலைபேசி நிலையத்தில் பணிபுரியும் என் மனைவி ராஜலக்ஷ்மியின் தூண்டுதலும் தான். —வி. வி. சுப்பிரமணியன்

---

தோற்றுப்போனபோது, சுஜாதா பொங்கி எழுந்தாள். மறுநாள் 'புஸ்வாணம்' என்ற கட்டுரை சுந்தரத்தைக் கேலி செய்தது.

முதன் முறையாக சுஜாதா — சுந்தரத்திடையே பூசல் எழுந்து, சண்டையாக முற்றிப் பிரிவாக முடிந்தது.

ஆத்திரத்துடன் அவளை நோக்கிப் பல்லைக் கடித்தான் சுந்தரம்.

''நான் பழையபடி டென்னிஸை என் லட்சியமாக்கிக்கிறேன். ஆனா இனிமே என் வாழ்க்கையில் உனக்கு இடமில்லை.''

''நீங்க பேரோடும் புகழோடும் வாழணும்னுதான் நான் விரும்பறேன். அதுக்காக என் காதலையே விலையாகத் தரணும்னா அதுக்கும் நான் தயார். ஆனா பழையபடி நீங்க ஆக முடியும்னு நீங்க நம்பறீங்களா?''

அவள் முகத்தில் பரவிய புன்னகையைக் கண்டு, ஆவலோடு கேட்கிறாளா அல்லது கிண்டல் செய்கிறாளா என்று அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

''நான் முன்பைவிடப் பெரிய ஆளாக வரேனா இல்லையா பார்!'' என்று அவன் விடுத்த சவாலில் இருவரும் பிரிந்தார்கள்.

அடுத்த ஒன்றரை வருடங்களில் அவர்கள் சந்தித்துப் பேசிக் கொண்டதில்லை. பொது விழாக்களில், அவன் கலந்துகொண்ட சில போட்டிகளில் அவள் அவனைப் பார்த்ததுண்டு. அப்போதெல்லாம் அவனையும் மீறி ஓர் ஆசை அவள் மீது ஏற்படும். அதை அரக்கத்தனமாய் அடக்கிக் கொண்டு அவளை வெறுக்க முனைந்தான். அவள் அவனைக் கண்டும் வலியப் பேச முன்வந்ததில்லை, ஆனால் அவனது ஆட்டத்தின் மேடு பள்ளங்களை அவள் விமரிசிப்பது வழக்கம்போல் தொடர்ந்தது.

அவன் இன்று நேஷனல் சாம்பியன். இதற்காக அவன் அல்லும் பகலும் பாடுபட்டு உழைத்ததை யெல்லாம் நினைத்துப் பார்த்தான். 'இதற்கு யார் காரணம்' என்ற கேள்வி அடக்க அடக்க மீண்டும் மீண்டும் அவன் மனத்தில் நீரில் அமிழ்த்திய பந்தைப் போல் மேலே வந்து கொண்டே இருந்தது. 'சுஜாதாவால்' என்ற பதிலைச் சந்திக்க அவன் விரும்பாமல் போனாலும் மனத்தின் ஒரு மூலையில் சிறு குரல் அதை முணுமுணுப்பது அவனுக்குத் தெரியாமலில்லை.

மறுநாள் தொலைபேசி எங்கிருந்தோ ஒருவரை இவனுடன் இணைக்க அழைப்புக் குரல் விடுத்தது.

''ஹலோ!''

''கன்க்ராஜுலேஷன்ஸ்.''

''தேங்க் யூ'' — 'யாரோ ஒரு ரசிகை. 'இதுவே சுஜாதாவாக இருக்கக் கூடாதா?' என்ற எண்ணத்தை வளர விடாமல் பார்த்துக்கொண்டான்.

''சுஜாதா.''

அவன் ஸ்தம்பித்துப் போனான். அவன் இதயம் ஏதோ நிகழப் போகிறது என்ற இனம் புரியா எதிர்பார்ப்பில் துடிதுடித்தது. அவன் வயிற்றில் ஏதோ ஒன்று 'குப்'பென்று பரவிச் 'சோரேல்' என்றது. இன்பமா, வேதனையா என்று புரிந்து கொள்ள முடியாத ஒரு விசித்திர உணர்ச்சி நெஞ்சைக் கவ்வியது.

''சுந்தர்! உங்களை நான் பார்க்க விரும்பறேன். பண்பு தெரிந்தவர் நீங்க. என்னைப் பார்க்க மறுக்க மாட்டீங்கன்னு நெனைக்கிறேன்.''

அதே சுஜாதா — மாறவேயில்லை. இவளுக்குத்தான் எவ்வளவு தன்னம்பிக்கை! தான் படபடத்துப் பேசத் திணறும் இதே நேரத்தில் இவள் எப்படி இவ்வளவு தைரியமாய், இயற்கையாய், அமைதியாயிருக்கிறாள்?

''என்ன, பதிலையே காணோம்? இன்னிக்கு மத்தியானம் ஒரு மணிக்கு ஜெமினி டிரைவ்-இன்னுக்கு வர முடியுமா? இஷ்டமில்லாட்டா தயங்காமல் சொல்லுங்க.''

அவள் சிரிக்கிறாள். இவனுக்கோ குழப்பம்.

''ஆல்ரைட். இட்ஸ் எ ப்ளெஷர்.''

''தேங்க் யூ'' — அவள் ஃபோனை வைத்து விட்டாள். இவன், அவள் ஏன் தன்னைச் சந்திக்க விரும்புகிறாள் என்று புரியாமல் திகைக்கிறான். அதைவிட, தான் ஏன் அதற்குச் சம்மதித்தோம் என்று அவனுக்குப் புரியவில்லை.

---

மாமேதை மணிமொழி:



## அன்பு

கணிதப் பேராசிரியர்கள், இரு புள்ளிகளைச் சுருக்கமாக இணைக்கும் கோடு நேர்க்கோடு தான் என்பார்கள். அதேபோல் இரண்டு உள்ளங்களை, இணைக்கும் சுருக்கமான பாதை அன்புதான்.

# நீங்கள் பணத்தை வீணாக்குபவரா?



கட்டுப்பாடில்லாவிட்டால் குழந்தைகள் மட்டுமல்ல, பணமும் தான் வீணாகும். உங்கள் பணத்தை கடுமையான உழைப்பில் ஈடு படுத்தி அதை பன்மடங்காக்குங்கள். அதன் மதிப்பை உயர்த்துங்கள். எப்படித் தெரியுமா? பணத்தை தங்கமாக்குங்கள்; அதற்காக நீங்கள் கடுமையாக உழைத்திருக்கிறீர்கள் என்பதை மறவாதீர்கள்.

உங்கள் பழைய நகைகளை புதியனவாக நவீன பாணியில் மாற்ற விரும்புகிறீர்களா, அதை நிறைவேற்றுபவர்கள் உம்மிடி முரளீதர் ஜுவல்லர்ஸ். மேலும் உம்மிடியார் டெபாஸிட் கார்ப்பரேஷனில் முதலீடு செய்து ஐந்து வருடங்களுக்கு 18% வட்டியைச் சம்பாதியுங்கள்; முதலீடும் பாதுகாப்பாக இருக்கும்.



- உம்மிடி முரளீதர் ஜுவல்லர்ஸ்
- உம்மிடியார் டெபாஸிட் கார்ப்பரேஷன்

53, கதீட்ரல் ரோடு, சென்னை–600 086 போன்: 83849/89039

Criterion VMJ 3657 TM

# சொந்தமாக ஒரு தொழில் ஆரம்பிக்க வேண்டும் என்ற எனது கனவை நிஜமாக்கியது யூகோபாங்க்

கல்லூரி படிப்பு முடிந்து சம்பாதிக்கத் தொடங்கியதிலிருந்தே, நானாக சொந்தமாக ஒரு தொழில் ஆரம்பிக்க வேண்டும் என்று நான் கனவு கண்டுக்-கொண்டிருந்தேன்.

அது நிறைவேற முடியாமல் ஒரு தடங்கல்—தேவையான முதல் என்னிடம் இல்லை.

அப்பொழுதுதான், நண்பர் ஒருவர் மூலம், **யூகோபாங்க்கில்** தொடர்ந்து முறையாக சேமிக்கப்படும் சிறுதொகை சில வருடங்களில் கணிசமான ரொக்கமாக ஆகும் என்பதை அறிந்தேன்.

ஏழு வருடங்களுக்கு முன் **யூகோபாங்க்கில்** ரெகரிங் டெபாசிட் திட்டத்தின் கீழ் ஒவ்வொரு மாதமும் ரு 150/- சேமிக்க ஆரம்பித்தேன்.

சென்ற மாதம் **யூகோபாங்க்** எனது நெடுநாள் கனவை நிஜமாக்கியது.

சைக்கிள் தொழிலுக்கு தேவையான பாகங்களை தயாரிக்கும் ஒரு சிறிய தொழிற்சாலையை நான் தொடங்கியுள்ளேன்.

இப்பொழுது நான் மிகவும் மகிழ்ச்சியாகவும், அதோடு **யூகோபாங்க்கிடம்** என்றும் நன்றி உடையவனாகவும் இருக்கிறேன்.



## யூகோபாங்க்

### அளிக்கும் லாபகரமான டெபாஸிட் திட்டங்கள்

**ஸேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்ஸ் திட்டம்**
**ஃபிக்ஸட் டெபாசிட் திட்டம்**
**டெபாஸிட் ஸெர்ட்டிபிகேட் திட்டம்**
**ரெகரிங் டெபாசிட் திட்டம்**
**க்ரோ யுவர் மணி ஸ்கீம்**
**டைனி ஸேவிங் ஸ்கீம்**
**மாதாந்திர பென்ஷன் திட்டம்**

**யுனைடெட் கமர்ஷியல் பாங்க்**

உங்கள் அருகாமையில் உள்ள வசதியான பாங்க்

UCO/CAS-47/77

காரிலிருந்து அவன் இறங்கியபோது பக்கவாட்டிலிருந்து சுஜாதா வந்தாள்.

இருவரும் காருக்குள்ளேயே அமர்ந்தனர். அவனுக்கு என்ன பேசுவதென்றே புரிய வில்லை. அவளோ வேண்டுமென்றே அவனைச் சோதிப்பது போல் மௌனம் சாதித்தாள். அவனுக்குத் தர்ம சங்கடமாக இருந்தது. ஏதாவது பேச வேண்டுமே! என்ன பேசுவது?

அவளே பேசினாள்—

''சுந்தர்! நேத்து உங்க ஆட்டம் பிரமாதம். அதுக்கு நான் காரணமாயிருந்த துக்காக ரொம்பப் பெருமையும் கர்வமும் படறேன்.''

''இதில் கர்வப்பட உனக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்? நம்ப சம்பந்தமெல்லாம் ஓய்ந்துபோய் ஒரு வருஷத்துக்கு மேலே ஆறதே. ஞாபகமில்லையா?''

''இல்லே சுந்தர்! அந்த ஒரு வருஷமாகத் தான் நமக்குள்ள சம்பந்தம் அதிகமானது. அந்தச் சம்பந்தத்தின் ரிஸல்ட்தான் உங்களுக்கு நேத்துக் கிடைச்ச வெற்றி.''

சுந்தரம் வாய் விட்டுச் சிரித்தான்.

''சுஜாதா! நீ ரொம்பக் கெட்டிக்காரி. நான் சாம்பியன் ஆனதும் நம்ம காதலைப் புதுப்பித்துக் கொள்ளத் திட்டம் போடறே, இல்லையா? அடுத்த வருஷம் நான் தோத் துட்டா, 'மறுபடியும் என் காதல் போயிடுத் து'ன்னு சொல்லிட்டுப் போயிடலாம். இந்தப் புது மாதிரிக் காதல் ரொம்ப தமாஷாயிருக்கு.... ஹாஹாஹா...!'' என்று சுந்தரம் சிரித்தான்.

சுஜாதா தலையைத் திருப்பி வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் கண்களிலிருந்து மௌனமான அழுகை கண்ணீராய்ப் பெருகியது. அடக்க முயன்று தோற்றுப் போனதால், அழுகை விசும்ப லாய் வெடித்த போது சுந்தரத்தின் சிரிப்பு அடங்கியது.

''சுந்தர்! காதல் என்பது ரொம்ப உயர்ந்த விஷயம். அதை ஒருவருக்கொருவர் பரஸ்பர அன்பின், மதிப்பின் பரிசாகத்தான் பரிமாறிக்கணும். அப்படித்தான் நாம் இருந்தோம். உங்க திறமைக்குப் பரிசாகத்தான் என் காதலைத் தந்தேனே தவிர, அதற்கு விலையாக அல்ல. காதலால் ரெண்டு பேர் வாழ்க்கையும் மேம்படணும். அதுதான் உண்மையான காதலுக்கு அடையாளம். அப்படி அமையறதுதான் காதலுக்குத் தகுந்த மரியாதையும் கூட. நீங்க என் திறமையைப் பாராட்டி அதற்கு அடையாளமாய் என்மீது அன்பு காட்டினபோது அந்த உற்சாகத்தில் நான் மேலும் மேலும் எழுதிக் குவித்தேன். ஆனா என் காதல் உங்களை மேம்படச் செய்யாமல் உங்கள் திறமையை, தொழிலை அலட்சியம் செய்யத் தூண்டியது. அதனால்தான் நான் அப்படி நடந்துக்கிட்டேன். திறமைக்காக ஒருத்தரைக் காதலிக்கிறது தப்புன்னு நீங்க இன்னமும் நினைக்கிறீங்களா? வேற எதுக்காகக் காதலிக்கிறது சரின்னு உங்களாலே சொல்ல முடியுமா? ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்காமக் கண்டதும் காதல் கொள்வது ஆதாரமில்லாத, அறிவு பூர்வமில்லாத அசட்டுத்தனம்னு நீங்க புரிஞ்சுக்கலையா?''




''குளிர் காலத்திலே சூடா சாப்பிடறதை விட்டுட்டு இந்த 'ஆறிய' பவன்லே எதுக்கு சாப்பிடணும்? 'ஆறிய பவன்'னு போர்டே எழுதிப் போட்டிருக்காங்க.. எல்லாம் ஆறிப் போய் இருக்கும்!''

சுந்தரம் மௌனமாயிருந்தான். 'இவள் சொல்வதெல்லாம் சரியாகத்தான் இருக்கு' என்று தோன்றியது.

''அடுத்த வருஷம் நீங்க தோத்துட்டா, என் காதல் மறைஞ்சு போயிடாது. வெற்றி தோல்விகளை விட அவைகளுக்குப் பின்னால் இருக்கிற நம் மனப்பான்மை எப்படிப் பட்டது என்பதுதான் முக்கியம். வாழ்க்கையிலே நம்ம லட்சியத்தை அடையறோமோ இல்லையோ, அட்லீஸ்ட் லட்சியம்னு ஒண்ணாவது இருந்தாகணும் இல்லையா? வெற்றி கிடைச்சாலும் கிடைக்காமப் போனாலும் வெற்றிக்காக முயற்சியாவது பண்ண வேண்டாமா? நீங்களே அலட்சியம் செய்த உங்க லட்சியத்தை நான் அடிக்கடி எனக்குள்ளேயே புதுப்பிச்சுக்கிட்டே இருந்தேன். நீங்க சாம்பியனாகணும்னு நான் விரும்பாத நாள் கிடையாது. கடந்த இரண்டு வருஷமா எனக்கு இதே ஜபம்தான் சுந்தர்! இதற்கு என்ன அர்த்தம்னு புரியுதா?''

சுந்தரம் அவளை உற்றுப் பார்த்தான். அவர்கள் பிரிந்ததிலிருந்து தான் அவளை நினைத்து உருகியதை விட அவள் தன் நினைவாகவே இருந்திருக்கிறாள் என்று அவனுக்குப் புரிந்தது.

அவன் கண்களில் துளிர்த்தது கண்ணீர் மட்டுமல்ல; காதலும்தான்.

மாமேதை மணிமொழி :

## ஜனநாயகம்



ஒரு செடி நன்கு வளர நல்ல மண்ணும் நல்ல சூரிய வெளிச்சமும் எவ்வளவு அவசியமோ, அவ்வளவு அவசியம் நல்ல ஜனநாயகப் பயிர் செழிக்கக் கீழே அதிகாரமும், மேலே அறிவுடைமையும்.



# அப்பாவுக்காக ஒரு நாள்

சாருகேசி

"ஏதற்காக வெளியிலே போகணும்?'' என்று சாமிநாதன் தூக்கிய குரலில் இரைவது கேட்டது. தியாகராஜன் உள்ளே நுழைவதா வேண்டாமா என்று ஒரு நிமிஷம் தயங்கிக் கொண்டிருந்தபோது. ''கண் சரியாகத் தெரியாதபோது யார் உங்களை வெளியே போகவில்லை என்று அழுதார்கள்? பாருங்கள், காலில் அடி. முழங்கையில் சிராய்ப்பு. சட்டை கிழிசல், வேட்டி முழுசும் மண். சீச்சீ....

தியாகுவுக்குத் தெரிந்து போயிற்று, சாமிநாதன் தன் தகப்பனாரிடம்தான் இரைகிறான். தகப்பனார் ஆயிற்றே என்று சாமிநாதன் ஒருபோதும் இரக்கம் காட்டியதில்லை. சற்றுப் பேச்சு நின்றவுடன், ''என்னடா, எங்கே இரண்டு நாட்களாக வீட்டுப் பக்கம் காணோம்?'' என்று அப்போதுதான் நுழைகிறவன் மாதிரி கேட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தான் தியாகு.

''வாடா!'' என்றான் சாமிநாதன். அவன் தன் தகப்பனாரைப் பார்த்த பார்வையில் 'உள்ளே போய்விடுங்கள்' என்று கட்டளை விடுகிற மாதிரி தோன்றியது.

தியாகுவுக்குச் சற்று அதிர்ச்சியாக இருந்தது, சாமிநாதனின் தகப்பனாரைப் பார்த்த போது. காலில் அடி யென்றால் சாதாரண அடி அல்ல. ரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது. கைச் சிராய்ப்பும் ரத்தப் புள்ளிகளோடு தெரிந்தது. பக்கவாட்டில் சட்டை நன்றாகக் கிழிந்து தொங்கியது. வேட்டி பெங்கும் தெருச் சகதியில் புரண்ட மாதிரி மண் அப்பியிருந்தது.

''என்ன மாமா இது!'' என்று பதறிப் போய்விட்டான் தியாகு. ''என்னடா சாமா இது. பார்த்துக் கொண்டு நிற்கிறே நீ!''

சாமிநாதனுக்குத் தர்மசங்கடமாக இருந்தது போலும். ''எங்கேயோ வெளியே நடக்கப் போய்ச் சைக்கிள்காரன் மோதிக்கீழே விழுந்திருக்கிறார்....'' என்றவன், தகப்பனார் பக்கம் திரும்பி, ''சட்டையைக் கழற்றிப் போடுங்கள்!'' என்றான் சாமா. ''லீலா... அப்பாவுக்கு ஒரு வேட்டி எடுத்துக் கொடு'' என்று மனைவியைக் கூப்பிட்டான்.

''சற்றுப் பொறு சாமா. முன்னால் ரத்தத்தை நன்றாகத் துடைக்க வேண்டும். டாக்டரிடம் அழைத்துப் போய் இஞ்செக்ஷன் போட வேண்டும்.''

அவரைப் பாத்ரூமுக்குள் அழைத்துச் சென்றான் தியாகு. காயங்களைத் துடைத்து டெட்டால் விட்டுக் கழுவி, வேறு வேட்டி சுற்றிவிட்டு மெல்ல அவரை நாற்காலி வரை அழைத்துக் கொண்டு வரும்பொழுது ''சாமா தான் தலையை வலிக்கிறது, மாத்திரை கிடைத்தால் பரவாயில்லை என்றான். அதற்குத்தான் வெளியே போனேன்'' என்றார் மெல்ல, அவனது முதுகை ஆதரத்துடன் வருடிக் கொடுத்தபடி. தியாகுவுக்கு இதமாக இருப்பது போல் தோன்றிற்று. சிறு வயதிலேயே தகப்பனாரை இழந்துவிட்ட அவனுக்கு அந்த வருடல் அவனுள் ஒரு புல்லரிப்பை உண்டாக்கிற்று.

சாமிநாதனை எத்தனை வருடங்களாகப் பழக்கம்! கல்யாணத்துக்கு முன்னாலேயே இப்படித்தான். சள் சள்ளென்று எரிந்து விழுவான் அப்பாவிடம். அவர் ஒரு கேள்வி கேட்டால் பதில் தரப் பத்து நிமிஷங்களாவது பிடிக்கும் அவனுக்கு. அப்பாவுக்கும் பிள்ளைக்கும் அவ்வளவாக ஒட்டுதல் இல்லை. ஒன்றிரண்டு வருடங்களில் அம்மாவும் போய்ச் சேர்ந்தாள். அதற்கு முன்னாலேயே லீலா வைத்தான் பண்ணிக் கொள்வேன் என்று ஒற்றைக் காலில் நின்ற சாமிநாதன், அப்பாவுக்கு அவ்வளவாகப் பிடிக்காதபோதும், தன் கம்பெனியில் பெரும் பதவி வகித்துக் கொண்டிருந்த ராமனுதனின் பெண் லீலாவை மணந்து கொண்டான். கல்யாணத்துக்கு அப்புறம் இன்னும் மோசமாயிற்று, சாமிநாதனின் பேச்சும், போக்கும். ''வேறு எங்கேயும் போய் இருக்கவும் வழியில்லை. ஒரே பிள்ளையாகப் போய்விட்டான்'' என்று தியாகுவிடம் ஜாடை மாடையாகச் சொல்லி வருத்தப் பட்டுக் கொண்டிருக்கிறார். ஆனால் ஒரு நண்பன் என்ன செய்ய முடியும் அவருக்கு, ஆறுதலாய் நாலு வார்த்தைகள் சொல்வதைத் தவிர!






தியாகு குளிக்கக் கிளம்பிக் கொண்டிருந்தபோது, யாரோ கதவைத் தட்டிய மாதிரி இருந்தது.

''யாரு பார்!'' என்று தங்கை மாலதியைக் கூப்பிட்டான் தியாகு. அம்மா உள்ளே கைக் காரியமாக இருந்தாள். கதவைத் திறந்து விட்டு உள்ளே போய்விட்டாள் மாலதி.

வந்த பையனை எங்கோ பார்த்த மாதிரி இருந்தது. எங்கே?

''நான் உங்கள் நண்பர் சாமிநாதனின் பக்கத்து வீட்டுப் பையன். சாமிநாதனின் அப்பா இந்த லெட்டரைக் கொடுக்கச் சொன்னார் உங்களிடம்'' என்று ஒரு கடுதாசியைக் கொடுத்தான். ''எனக்கு ஸ்கூலுக்கு நாழியாகிறது. நான் போகட்டுமா?'' என்று கேட்டுவிட்டு, சைக்கிளை அவசரம் அவசரமாக ஓட்டிக் கொண்டு போய்விட்டான்.

'உடம்பு கொஞ்சம் சரியில்லை. முடிந்தால் ஆபீஸ் போகுமுன் இப்படிச் சற்று வரவும்—ராமாமிருதம்.'

சாமிநாதன் எங்கே போனான்? அவன் மனைவி லீலா கூடவா இல்லை? நிலைமை சாதாரணமாக இருந்திருந்தால் ராமாமிருதம் இப்படி ஒரு கடிதம் எழுதிக் கொடுத்திருக்க மாட்டாரே அடுத்த வீட்டுப் பையனிடம்?

அவசரம் அவசரமாகக் குளித்து விட்டு அவன் டிரஸ் செய்து கொண்டு கிளம்பும்போது வியப்புடன் பார்த்தாள் அம்மா. ''எங்கேடா கிளம்புறே, மணி ஒன்பதாகப் போகிறது. லீவுதானே போட்டிருக்கிறே இன்றைக்கு....?'' என்று அம்மா கேட்டுக் கொண்டே வந்தபோது, ''இதோ வந்து விடுகிறேன் ஒரு மணி நேரத்தில். கதவைச் சாத்திக்கொள்!'' என்று ஓடினான்.

சாமிநாதனின் ஸ்கூட்டரைக் காணவில்லை. உள்ளே இருந்து எந்தச் சத்தமும் வரவில்லை. கதவு சாத்தியிருந்தது. தியாகு காலிங் பெல்லை அழுத்தியபோது கூட முதல் ஐந்து நிமிஷங்களுக்கு ஒரு பதிலும் இல்லை. மறுபடியும் மறுபடியும் அழுத்தி, பத்து நிமிஷங்களுக்கு அப்புறம்தான் கதவு திறந்தது.

தியாகு திகைத்துப் போய் விட்டான்.

காய்ச்சலில் முகம் சிவந்து, கண்கள் பஞ்சடைந்திருக்க, நடுங்கிக்கொண்டே, தலையில் சுற்றியிருந்த மப்ளரை ஒரு கையால் பிடித்துக் கொண்டு மறு கையால் கதவைத் திறந்தார் ராமாமிருதம்.

''என்ன ஆயிற்று உங்களுக்கு? சாமா எங்கே, லீலா எங்கே?'' என்று உள்ளே பாய்ந்தான் தியாகு. கதவைச் சாத்திவிட்டு அவரை மறுபடியும் படுக்கையில் கிடத்தினான். உதடு உலர்ந்து போய்த் தோல் உரிந்திருந்தது.

உடம்பு அனலாய்க் கொதித்தது, தியாகு அவரைத் தாங்கிக் கொண்ட போது.

''சாமாவும் லீலாவும் காஷ்மீர் போயிருக்கிறார்கள். எல். டி. சி. வீணாகிப் போகிறதாம்'' என்று நாவால் உதட்டை ஈரப்படுத்திக் கொண்டார்.

''உங்களுக்கு உடம்பு சரியில்லாதது தெரியுமா?'' என்று ஆத்திரத்துடன் கேட்டான் தியாகு.

அவர் முகத்தில் இலேசான கேலிப்புன்னகை தோன்றி, அவர் உதட்டைக் கோணிற்று.

''சாதாரண ஜுரம்தான். மாத்திரை வாங்கி வைத்திருக்கிறேன். இரண்டு வேளை விழுங்கினால் எல்லாம் தானாகச் சரியாகி விடும் என்று சொன்னான். டிக்கட் ஏற்கனவே ரிசர்வ் செய்திருந்தானாம். இரண்டு பேரும் போயிருக்கிறார்கள். இரண்டு வாரம் ஆகும் வர.''

''இரக்கமில்லாத பாவி!'' என்று சற்று வாய் விட்டே தியாகு சொல்விட்டான் போலிருக்கிறது. அவர் சிரித்துக் கொண்டார்.





இந்த படத்தில் என்ன இருக்கிறது என்பதை ஒரு நிமிஷத்தில் கண்டு பிடிக்க முடியாதவர்கள், இந்தப் பக்கத்தின் கீழே பறக்கவும். —எம். சிவசுப்ரமணியன்

---

''என்ன சாப்பிட்டீர்கள்?'' என்று கேட்டான்.

''என்னத்தைச் சாப்பிட முடியும்?''

கஞ்சி வைத்துக் கொடுக்க ஏதேனும் இருக்கிறதா என்று பார்த்தான். சமையல் உள்ளில் எல்லாவற்றையும் தேடி எடுத்து காஸ் அடுப்பைப் பற்ற வைத்தால் — காஸ் இல்லே.

மண்ணெண்ணெய் பாட்டிலைத் தேடி ஸ்டௌவைப் பற்றவைத்துக் குடிக்க முதலில் சுடுநீர் போட்டான். தாகத்துக்கு அதைக் குடித்துவிட்டு அவர் கண் அயர்ந்த போது வெளியே போய்த் தெரு முனையிலிருந்து ஒரு பாத்திரத்தில் பால் வாங்கிக் கொண்டு வந்தான். ஒரு ஹார்லிக்ஸ் பாட்டில் கையோடு வாங்கிக் கொண்டான். வந்ததும் அவருக்குப் பாலைச் சூடாக்கி ஹார்லிக்ஸ் போட்டுக் கொடுத்துவிட்டுக் கஞ்சி தயாரிக்க ஆரம்பித்தான்.

இடையே தெர்மாமீட்டரை வைத்துக் காய்ச்சல் எவ்வளவு என்று பார்த்தபோது தூக்கி வாரிப் போட்டது அவனுக்கு. 104!

''அப்படியே படுத்திருங்கள். டாக்டர் யாரையாவது அழைத்துக் கொண்டு வருகிறேன்'' என்று வெளியே கதவைப் பூட்டிக் கொண்டு விரைந்தான்.

அவனுக்குத் தெரிந்த டாக்டர் அப்போது வீட்டில் இருக்கவில்லை. தெரிந்த மற்ற ஒன்றிரண்டு டாக்டர்களும் ஆஸ்பத்திரிக்குப் போய்விட்டார்கள்.

கடைசியில், முன்பு எப்போதோ ஒரு நர்சிங் ஹோமில் பரிச்சயமாகியிருந்த பெரிய டாக்டர் ஒருவரைக் கெஞ்சிக் கூத்தாடி அவருடைய காரிலேயே அழைத்துக் கொண்டு வந்தான் தியாகு. அவர் வந்து பார்த்து மருந்துகளை எழுதிக்கொடுத்தபோது ஐம்பது ரூபாய் மருந்துகளை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்து, அருகிலேயே இருந்து, ராமாமிருதம் கண் விழித்தபோது பகல் மணி ஒன்றைத் தாண்டி விட்டது. காய்ச்சல் சற்று இறங்கி யிருந்தது.

''கஞ்சி வைத்திருக்கிறேன். குடிக்கிறீர்களா?'' என்று பரிவுடன் கேட்டான் தியாகு.

அவர் பசியோடு அதை அருந்திவிட்டு அவனை நன்றியுடன் பார்த்து, ''போன ஜன்மத்தில் நீ எனக்குப் பிள்ளையாகப் பிறந்திருக்கவேண்டும்'' என்றார் கரகரத்த குரலில்.

''ஏன், இந்த ஜன்மத்திலும் அப்படியே நினைத்துக் கொள்ளுங்களேன்!''

**''எ**ங்கே போயிருந்தாய் தியாகு? மணி மூன்றாகப் போகிறது!'' என்றாள் அம்மா, தியாகு வந்ததும்.

''உன் ஆபீசுக்குக் கூடப் போன் பண்ணினேனும் அண்ணா. இன்றைக்கு லீவு போட்டது மறந்து போய் ஆபீசுக்குப் போய்விட்டாயோ என்று நினைத்தோம்!''

''இரண்டு மணி வரை உனக்காகக் காத்திருந்து அப்புறம் சாஸ்திரிகள் இரண்டு பேருக்கும் அரிசியும் வாழைக் காயும் வைத்துக் கொடுத்தேன் தட்சிணையோடு!'' என்றாள் அம்மா. அவள் குரலில் தாபமும் கண்களில் நீர் துளிர்த்த மாதிரியும் தியாகுவுக்குத் தோன்றிற்று.

''அப்படியே நில் அம்மா!'' என்றான் அம்மாவிடம். கிழக்குப் பார்த்து அம்மாவை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான். அன்றைக்கு அவன் தகப்பனாரின் திதி என்று அப்போதுதான் தியாகுவுக்கு நினைவு வந்தது.

---

**FLY என்ற வார்த்தைதான் அது.**

---

பாமேதை மணிமொழி

## அரசாங்க அதிகாரங்கள்



அதிக அதிகாரங்களைச் செலுத்துவது மிதமிஞ்சிச் சாப்பிடுவது போல். முதலில் இன்பமாகத்தான் இருக்கும். பொறுப்பற்ற தன்மையும் சுகமாகத்தான் இருக்கிறது. இப்படிச் சிந்திக்காமல் இன்பங்களில் ஈடுபடுவது நோய் நொடியிலும் மரணத்திலுமே கொண்டு விடும். அதேபோல் அளவு கடந்த அரசாங்க அதிகாரத்தில் ஜனநாயகம் நிச்சயமாக அழிந்து விடும்.

# கிடுகு பதில்கள்!



⌘ எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

கே. மனைவியிடம் ரகசியங்களைக் கூறலாமா?

ப: நீங்கள் வேறு, உங்கள் மனைவி வேறு என்று ஏன் கருதுகிறீர்கள்? மனைவியிடம் விஷயங்களை மறைப்பதில்தான் கணவன்—மனைவி மன ஒற்றுமைக்குப் பங்கம் நேருகிறது. மனைவியும் கணவனும் உடலையே திறந்துகொள்ளும்போது உள்ளத்தைத் திறக்க ஏன் தயங்க வேண்டும்? வெற்றிகரமான திருமண வாழ்க்கையை ரகசியங்கள் என்ற அஸ்திவாரத்தின் மீது கட்ட முடியாது.

⌘ ல. பகவதி, தேவகோட்டை

கே. வக்கீல்கள் சிறப்பிதழ் என்று ஏன் யாரும் தயாரிக்கவில்லை?

ப: தங்களைப் பற்றி விளம்பரப் படுத்திக் கொள்வதோ தங்களது படத்தைப் பிரசுரித்துக் கொள்வதோ கூடாது என்ற தொழில் நியதி வக்கீல்களுக்கு உண்டு. ஆகவே சிறப்பிதழுக்கு விஷயம் கிடைப்பது கஷ்டம்.

⌘ டி. எஸ். கோமதி, கல்லிடைக்குறிச்சி

கே. ஜோசியம், நியுமராலஜியில் நம்பிக்கை உண்டா?

ப: துளிக்கூடக் கிடையாது. வாழ்க்கையில் நம்பிக்கை இழந்தவர்கள்தான் ஜோசியம், நியுமராலஜி ஆகியவைகளின் பின்னே செல்கிறார்கள். '28ம் தேதி சனி, கன்னி ராசிக்கு வந்த பிறகுதான் எனக்கு நல்ல காலம்' என்கிற ரீதியில்தான் பலர் சொல்கிறார்கள். யாராவது, ''கிரகம் மாறியதும் எனக்குச் சிரம தசையாம்'' என்று சொல்கிறார்களா? சுய நம்பிக்கை இழந்தவன்தான் ஜோதிடத்தை நம்புகிறான்.



⌘ வி. தர்மராஜன், செங்கோட்டை

கே. பணவசதி படைத்தவர்கள் அனாதைகளை எடுத்து வளர்த்தால் என்ன?

ப: செய்தால் சட்டப்படி குற்றமில்லை. (இந்தக் கேள்வி கேட்டதிலிருந்து உங்களைப் பற்றி ஒரு விஷயம் தெரிகிறது. தாங்கள் பண வசதி படைத்தவர் அல்ல!)

⌘ ஏ. சங்கரன், சங்கரன் கோவில்

கே. ஏ. என். சிவராமன் வீட்டு வேலைக்காரிக்கும் நடிகர் திலகம் வீட்டு ஆயாவுக்கும் உள்ள அரசியல் ஆர்வத்திறனில் யாருக்கு என்ன லாபம்?

ப: இரண்டு பேரும் ஒரே ஆசாமியாகக்கூட இருக்கலாம். ஆயாவின் பெயர் வேலம் மாவா என்று விசாரிக்க வேண்டும். (ஆமா, வேலைக்காரியாக இருந்தால் அரசியல் ஆர்வம் கொள்ளக் கூடாதா? அண்ணாவின் 'வேலைக்காரி'யும் அரசியலில் ஊறியவள் என்பது மறந்து விட்டதா?)



⌘ ராஜு—ராமநாதன், திருவனந்தபுரம்

கே. புதுக்கவிதை என்கிறார்களே, அது என்ன?

ப: இதற்குப் பதில் மு. மேத்தா எழுதிய புதுக் கவிதையே போதும். ''புதுக் கவிதை என்றால் என்ன? இலக்கணச் செங்கோல் - யாப்பு சிம்மாசனம் — எதுகைப் பல்லக்கு — மோனைத் தேர்கள்— தனிமொழிச் சேனை — பண்டித பவனி — இவை எதுவும் இல்லாத கருத்துக்கள் — தம்மைத் தாமே—ஆளக் கற்றுக் கொண்ட புதிய மக்களாட்சி முறையே — புதுக் கவிதை.''



⌘ கே. இராஜராமகோபாலன், திருநெல்வேலி

கே. எழுத்துத்துறையில் தோல்விகளையும் வெற்றிகளையும் சந்தித்தது உண்டா?

ப: நான் அப்பாயிண்ட்மெண்ட் வாங்கிப் போய் அவைகளைச் சந்தித்ததில்லை. அவை என்னைச் சந்தித்திருக்கின்றன. (ஆமாம், உங்கள் முழுப் பெயர் இதுவா? அல்லது சுருக்கி வைத்துக் கொண்டிருக்கிறீர்களா?)

⌘ டி. வி. மூர்த்திநாதன், அலங்கியம்

கே. முண்டியடித்துப் பார்த்த படம் எது?

என் நண்பர் ஒருவருடன் வெலிங்டனில் அபூர்வ சகோதரர்களைப் பார்த்தேன் ரிலீஸ் ஆன அன்று. பின்னால் என் நண்பர் பெரிய டைரக்டர் ஆனார். ஒரு நாள் அவருடன் பேசிக் கொண்டிருந்த போது 'அபூர்வ சகோதரர்கள்' கதாநாயகனே அவரைப் பார்க்க வந்தார்.

⌘ எஸ். தேவராஜன், கும்பகோணம்

கே. வரவர மட்டமான கேள்விகளுக்கெல்லாம் பரிசு வழங்குகிறீர்களே இது நீடித்தால்...

ப: உங்களுக்கும் பரிசு கிடைக்கக் கூடும்.

⌘ வடகரைச்செல்வன், வடகரை

கே. மனைவிக்கு அடங்கி நடப்பவரா? அடக்கி வைப்பவரா?

ப: என்னை அடக்கிவை என்று உத்தரவிடுவேன். அவள் பயந்து நடுங்கி அடக்கி வைப்பாள்.

---

ரூ. 5 பரிசு பெறுபவர்:

**ஏ. சங்கரன்**

**26, கோமதியாபுரம் புது 3-வது தெரு**

**சங்கரன்கோவில்**



Dr. S. R. சிவராஜ்



# காலையில் நான்கண்ட ஜோதி—எல்லாக்
# காட்சியும் நான்காணக் காட்டிய ஜோதி
# ஞாலமும் வானுமாம் ஜோதி என்னுள்
# நானாகித் தானாகி நண்ணிய ஜோதி

— திருஅருட்பா




இப்பூவுலகில் பிறந்து உயிர் வாழும் மக்களின் பிறவிப் பயன் இறைவனை அடைவதில் தான் பூர்த்தி அடைகிறது. 'இறைவன் அடி சேர்தல்' என்பதை அனைத்து ஞான நூல்களும் வலியுறுத்துகின்றன. பிறவி என்னும் தொலையாப் பெருங்கடலை நீந்திக் கடக்க வள்ளுவர் பெருமான் கூறும் நெறி 'இறைவன் அடி சேர்தல்' தான்.

கடவுள் வாழ்த்துப் பாக்களிலேயே, வள்ளுவர்,

''மலர் மிசை ஏகினான்
மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடு வாழ்வார்''

''வேண்டுதல் வேண்டாமை
இலான் அடி சேர்ந்தார்க்கு
யாண்டும் இடும்பை இல''

''அறவாழி அந்தணன்
தாள் சேர்ந்தார்க்கு அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது''

என்று மீண்டும் மீண்டும் 'இறைவன் அடி சேர்தல்' பற்றிக் கூறுகிறார்.

ஆனால் இறைவன் அடி சேர்தல் எப்படி என்று விளக்கவில்லை. அதற்குரிய வழி புலனாகவில்லை. கொஞ்சம் சிந்தித்துத் திருவருட்பிரகாச வள்ளலார் சுவாமி இராமலிங்கப் பெருமான் அருளிச் செய்த திருவருட்பாவைப் புரட்டிப் பார்த்தோமானால் ஒரு வழி புலனாகிறது. அது மிகவும் சுலபமான வழி.

அதுதான் அன்பு வழி; அன்பு மார்க்கம்; அன்பு நெறி. திருமூலர் காட்டிய ''அன்பே சிவம்'' என்றறியும் துரிய நிலை. அருவமான கடவுளுக்கு அன்புதான் உருவம் என்று வேதம் கூறுகிறது. அன்பை உருவாகக் கொண்ட இறைவனை அடைய, அவன் திருவடிகளைச் சேர, அன்பு மார்க்கம் தான் சரியான மார்க்கம்.

''துன்ப நினைவுகளும் சோர்வும் பயமும் எல்லாம், அன்பில் அழியுமடி, கிளியே! அன்புக்கு அழிவில்லை காண்...'' என்றார் மகாகவி பாரதியார்.

''அன்பின் வழியது உயிர் நிலை...'' என்பது வள்ளுவர் வாக்கு. மனித உயிர் உடலில் நிலைத்து நிற்பதற்கே அன்புதான் ஆதாரமாயிருக்கிறது என்பது அதன் பொருள்.

அந்த அன்பின் ஆழத்தையும், பரிணாமத்தையும், அது பரவி நிற்கின்ற நிலையையும் பற்றி அறிய வேண்டுமாயின் வள்ளலாரைத் தான் அணுக வேண்டும். மனித உயிர்களிடம் மட்டும் அவர் அன்பு பாராட்டவில்லை. ஓரறிவு உயிர்களாகிய செடி கொடிகளிடம் கூட அவரது அன்பு உள்ளம் அளவு கடந்த கருணையுடன் கசிந்தது.

''வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம்
வாடினேன் பசியினால் இளைத்தே
வீடுதோறு இரந்தும் பசி அறாது அயர்ந்த
வெற்றரைக் கண்டு உளம் பதைத்தேன்''

என்று மனம் உருகிக் கூறும் அவர் வாக்கு நமக்கு அன்பின் வழியை நன்கு விளக்கும்.

நம் உள்ளம் அன்பின் வயப்பட்டு விட்டால், 'இறைவன் அடி சேர்தல்' மிகவும் எளிதாகி விடும்.

இறைவனைத் தாம் கண்ட விதத்தை வள்ளலார் எவ்வளவு அழகாக எடுத்துச் சொல்கிறார்! அவரது வாக்கில் இறைவன் மலையாகவும், அரசாகவும், பரம் பொருளாகவும், அமுதமாகவும், கடலாகவும், அறிவு சொரூபமாகவும், அணுவுக்குள் அடங்கிய பேரொளியாகவும் இறுதியில் அன்புருவாகவும் விளங்குகிறான். அவரது பாடலைப் பார்ப்போம்:

''அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே
அன்பெனும் குடில்புகும் அரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனும் கரத்தமர் அமுதே
அன்பெனும் கடத்துள் அடங்கிடும் கடலே
அன்பெனும் உயிர் ஒளிர் அறிவே
அன்பெனும் அணுவுள் அமைந்த பேர் ஒளியே
அன்புருவாம் பரசிவமே''

இந்தப் பாடலை மீண்டும் மீண்டும் பாடிப் பார்க்கவேண்டும். அதன் மூலம் இறைவனைப் பார்க்க வேண்டும். அவன் அன்பில் லயித்து நாமும் அன்புருவாகி விடவேண்டும்.



# நான் அறிந்த ராஜாஜி

லார்ட் மவுண்ட்பாட்டன்

அரசியின் அந்தரங்கக் காரியதரிசி சர் மார்டின் சார்டெரிஸ் எனக்கு டெலிஃபோன் செய்து ராஜாஜி என்று அன்புடன் அழைக்கப்படும் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியாரின் மறைவு பற்றித் தெரிவித்த போது நான் பெரும் அதிர்ச்சியுற்றேன். அவர் எனது அந்நியந்த நண்பராகக் கால் நூற்றுண்டுக்கு மேல் விளங்கினர்.

1947 மார்ச் மாதத்தில் நான் இந்தியாவுக்கு வைஸ்ராயாக வந்த போது எனது அமைச்சரவையில் ஒருவர் என்ற முறையில் அவரை நான் அறிந்து கொண்டேன். தெளிந்த மதியுடையவராக, ஒளிவு மறைவின்றி வெளிப்படையாக அப்பட்டமாகப் பேசுபவராக அவர் விளங்கினர். பரிவுடன் பயனுள்ள விவாதங்களில் ஈடுபட எப்போதும் தயாராக இருந்தார். எனவே எங்களது பல சந்திப்புக்கள் எனக்கு மெய்யான ஆனந்தத்தை அளித்தன. அவருக்கும் அப்படியே இருந்திருக்கும் என நம்புகிறேன்.

இந்தியா பிளவுபடாமல் இருக்க வேண்டும் என்பதற்கு ஜின்னுவின் ஒப்புதலை என்னுல் பெற முடியாமல் போன பிறகு, 1947 ஆகஸ்டு மாதம் 15ம் தேதி அதிகார மாற்றம் நடந்த சமயம் ராஜாஜி மேற்கு வங்க கவர்னராக்கப்பட்டார். அந்தக் கால கட்டத்தில் அது அளப்பரிய முக்கியத்துவம் வாய்ந்த பதவி.

1948-ல் என் மனைவியும் நானும் எங்கள் கல்கத்தா விஜயத்தை மிகவும் ரசித்தோம். அவருடன் தங்கியிருந்தோம். விருந்தோம்பி மகிழ்விப்பதிலும் அவர் சிறந்தவர் எனக் கண்டோம். குறிப்பாக அவர் எங்களைப் பற்றி கல்கத்தாவில் சொல்லாற்றலுடனும் நட்புணர்வுடனும் நிகழ்த்திய பிரசங்கம் எங்கள் நெஞ்சை உருக்கி விட்டது. ஆங்கில மொழியைக் கையாளும் திறன் அவரிடம் பரிபூரணமாக இருந்தது. அவர் ஆங்கிலத்தை அழகாகக் கையாண்டு பேசியது போல் வெகு சில ஆங்கிலேயர்களே பேச முடியும்.

பிரிட்டிஷ் சட்டத்தை நன்கு பயின்றவரான அவர், அந்த நீதி முறையின் அடிப்படை உண்மைகளில் ஆயுள் பரியந்த நம்பிக்கை கொண்டிருந்தார். அவற்றை மேற்கு வங்க கவர்னராக இருந்த போது நிலைநாட்டியது மட்டுமல்ல, அதைவிட முக்கியமாக 1948 ஜூன் மாதத்தில் எனக்கு அடுத்தபடியாக இந்தியாவின் கவர்னர் ஜெனரலாக விளங்கிய போதும் நிலைநாட்டினர்.

கடைசி ஆங்கிலேய கவர்னர் ஜெனரலுக்குப் பிறகு முதல் இந்திய கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்க ராஜாஜியை விடச் சிறந்த ஒருவரை இந்திய அரசு தேர்ந்தெடுத்திருக்க முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை.

ராஜாஜியின் ஹாஸ்ய உணர்ச்சி அவரை என்றுமே கைவிட்டதில்லை. பதவி மாற்றத்துக்காக ராஷ்டிரபதி பவனத்துக்கு அவர் வந்த சமயம் வாசல் படிகளில் அவரை நான் வரவேற்ற போது எடுக்கப்பட்ட புகைப்படப் பிரதி ஒன்றை அவர் எனக்கு அனுப்பி வைத்தார். அதன் மீது அவர் ''இப்படித்தான் 'மந்திரவாதி' என்னைச் சங்கடமான பதவியில் அமர்த்தினர்!'' என்று எழுதியிருந்தார்.

தமது அரசு இந்திய சமஸ்தான மன்னர்களுடன் செய்து கொண்டிருந்த ஒப்பந்தத்தை மீறியது குறித்து அவர் பல தடவைகளில் எனக்கு எழுதித் தமது ஆழ்ந்த துயரத்தை வெளியிட்டார்.




வான வீணையின் வைரத் தந்திகள்
  நகரும் மேகத்தின் நக்கூரப் பாய்ச்சல்
தேவ கன்னிகை சிலம்பவிழ் முத்து
  மன்மதன் வழங்கும் அமுத பாணங்கள்
தழைக்கட்டும் வையம் எனத்
  தான் தழைந்து வந்த
மழை எனப் பெயர் கொண்ட
  வள்ளல்களா இவை?
மழையோ மழை என்று வானத்தைப் பார்த்துச்
  சின்னக் குழந்தைகள் சிரித்திடும் ஒலிகள்

ஜோதப்பன்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

நாடாளுமன்ற ஜனநாயகத்தில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டிருந்தார் அவர். தேர்ந்தெடுக்கப்படுமானால் மாற்று அரசு அமைக்கும் திறனுடைய சக்தி வாய்ந்த ஓர் எதிர்க்கட்சி இந்தியாவுக்குத் தேவை என்று கருதினார். இந்த அடிப்படையில்தான் தாம் சுதந்திராக் கட்சியை உருவாக்கியதாக அவர் என்னிடம் கூறினார்.

ஐ. நா. சபை தலைமையகத்துக்கு விஜயம் செய்யச் சென்றபோது வழியில் லண்டனில் தங்கியிருந்த சமயம் எனது மகளுடனும் என்னுடனும் மதிய உணவு அருந்த வந்தார். நாங்கள் மீண்டும் இணைந்து ரொம்ப ஆனந்தத்துடன் எங்கள் பழைய இல்லத்தைப் பற்றிய நினைவுகளைப் பகிர்ந்து கொண்டோம். அவர் என்றும் போல் அன்பே உருவான வராக இருந்தார்.

1967ல் இந்தியாவுக்கு நான் கடைசியாக வந்திருந்த போது அவருக்குத் தொண்ணூறு வயதாகி விட்டிருந்தபடியால் நான் சென்னைக்குச் சென்று அவரைப் பார்ப்பதாகச் சொன்னேன். ஆனால் அவரோ தாம்தான் டில்லிக்கு வந்தாக வேண்டும் என்று வற்புறுத்திக் கூறினார். எனது மூத்த மகள் பட்ரீஷியா பிரா:போர்னும் நானும் ராஷ்டிரபதி பவனில், கவர்னர் ஜெனரல் தமது சொ ந்தக் காரியங்களைக் கவனிப்பதற்கென்று ஏற்பட்ட அதே பழைய அறையில் அவரைச் சந்தித்து உணர்ச்சி வசப்பட்டோம்.

என்னுடைய வாழ்க்கையையும் காலங்களையும் விவரித்த டெலிவிஷன் தொடர் நிகழ்ச்சிக்கு அவர் ஒரு பேட்டி அளிக்கச் சம்மதித்தார். அந் நிகழ்ச்சி இதுவரை 79 நாடுகளில் காண்பிக்கப் பட்டுள்ளது. இந் நிகழ்ச்சியில் ராஜாஜியின் பேட்டியும், பிரதமர் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் பேட்டியும் மிகச் சிறந்தவை என ஏகமனதாக அனைவராலும் கருதப்பட்டன.

அதிகார மாற்றத்தை அமைதியாகவும் நட்புரிமையுடனும் நடத்திக் காட்டிய அந்தத் தலைமுறை இந்தியத் தலைவர்களுள் கடைசியாக எஞ்சியிருந்தவர் அவர்தான். ''யுத்தமின்றியே ஒரு சமாதான ஒப்பந்தம்'' என்று பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் வாழ்த்தி வரவேற்கப்பட்ட ஒரு நடைமுறைத் தீர்வை, ஜவாஹர்லால்நேரு, வல்லபாய் பட்டேல், ராஜகோபாலாச்சாரி இவர்களது நெருங்கிய சகாக்கள் ஆகியோரது ஒத்துழைப்பும் ஆதரவும் இன்றி என்னால் கண்டுபிடித்திருக்கவே முடியாது.

ராஜாஜியின் பெயர் அவரது அன்புக்குப் பாத்திரமான இந்தியாவில் மட்டுமின்றி பிரிட்டன் முழுவதும் கௌரவித்துப் போற்றப்படும்.

(நன்றி: அகில இந்திய ரேடியோ)

---

## தெய்வ சன்னிதானத்தில்....



1953-ஆம் ஆண்டு. அன்றைய முதல்வராக இருந்த ராஜாஜி, சென்னை [illegible] வரர் அக்ரஹாரத்தில் நடந்த 'பாரதி விழா'வில் கலந்து கொண்டார்.

விழாவைத் தொடர்ந்து அரியக்குடி கச்சேரி முடிந்ததும் ராஜாஜி, கல்கி ஆக்கூர் அனந்தாச்சாரி இன்னும் பலர் [illegible] ஆலயத்துக்குச் சென்று விட்டுத் திரும்பினார்கள். பிராகாரத்தில் ஒரு சிலர் சாஷ்டாங்கமாக விழுந்து ராஜாஜியை வணங்கினார்கள்.

அப்போது ராஜாஜி.... ''கோயிலுக்குள்ளே மனிதருக்கு நமஸ்காரம் பண்ணக் கூடாது!..., சாமிக்கும் அம்பாளுக்கும் மற்ற தெய்வங்களுக்கும் மட்டும்தான் நமஸ்காரம் பண்ணணும்....'' என்று, வாக்கிங் ஸ்டிக்கை வலது கையில் பிடித்துத் தூக்கியபடி, நமஸ்கரித்தவர்களிடம் வேண்டிக் கொண்டார்.

அருகிலிருந்தவர்கள் ராஜாஜி பேச்சைக்கேட்டு மெய்சிலிர்த்து நின்று விட்டார்கள். அவர்களில் அடியேனும் ஒருவன்.

ஏ. சுவாமிநாதன்



மூதறிஞர் ராஜாஜியை ஆறு கோணங்களில் நோக்கி ஒவ்வொன்றும் பற்றி ஆறே வாக்கியங்கள் கூறுமாறு இன்றைய இளைஞர் சமுதாயத்தின் பிரதிநிதிகளாக ஆறு பேரைத் தேர்ந்தெடுத்துக் கேட்டபோது....



# ஆறு கோணங்களில்...



## ராஜாஜி - காந்தியச் செம்மல்

**குமாரி எஸ். ஜெயந்தி பி.ஏ., இரண்டாம் ஆண்டு**
**வைஷ்ணவா மகளிர் கல்லூரி**

தனி வாழ்விலும் அரசியல் வாழ்விலும் காந்திய தத்துவங்களைக் கடைப்பிடித்த சிலர் ஸி. ஆர். சுதந்திரப் போராட்டத்தில் ஒவ்வொரு கட்டத்திலும் காந்திக்குத் துணை நின்றதுடன் மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு ஆகியவற்றுக்காக அவர் பாடுபட்டது தொண்டல்ல, ஒரு மகத்தான வேள்வி. காந்தி தண்டி உப்பு சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டபோது, இந்தத் தென்னாட்டு காந்தி வேதாரண்ய யாத்திரை புறப்பட்டார். கலப்புத் திருமணத்தைத் தம் குடும்பத்திலேயே நடத்திக் காட்டியவர். வரலாற்றுச் சிறப்பு மிக்க 'திருச்செங்கோடு, ஆசிரமம் இந்த ராஜரிஷியின் கைவண்ணம். காந்திய நெறியைக் கடைப்பிடித்துப் பெரும் வருவாய் தந்த தம் வக்கீல் தொழிலைக்கூட விட்டுக் கொடுத்தவர், 'என் மனச்சாட்சியின் காவலர்' என்று மகாத்மாவால் புகழப்பட்டதில் வியப்பில்லை.



## ராஜாஜி - எதிர்க்கட்சித் தலைவர்

**திரு பா. ஸ்ரீஹர்ஷன் பி.ஏ. இறுதி ஆண்டு**
**மாநிலக் கல்லூரி**



தம் கொள்கை பெரிது, தன்னலம் பெரிதல்ல எனச் செயல்பட்ட தலைவர்கள் சரித்திரத்தில் அரிது. ராஜாஜி அப்படிப்பட்டவர். தம் கொள்கைக்காகக் காந்தியையே எதிர்த்தவர். இவர் ஆளும் கட்சியின் கொள்கைகளை எதிர்ப்பாரே தவிர, தற்கால அரசியல் வாதிபோல, 'சவால்' விட்டதில்லை. ஆளும் கட்சிக்கு எதிரான சிறந்த மாற்றுக் கொள்கைகளுடன் சுதந்திராக் கட்சியைத் தோற்றுவித்து, மற்றத் தலைவர்களுக்கு ஒரு வழிகாட்டியாகத் திகழ்ந்தவர். ஜனநாயகத்தில் எதிர்க்கட்சி இன்றியமையாதது என்று செயல்பட்டாரே ஒழிய அவரது எதிர்ப்பு எப்போதும் ஆக்க பூர்வமானதாகவே இருந்தது.



## ராஜாஜி - இலக்கியகர்த்தா

**குமாரி க. நளினி, பி. எஸ்ஸி.. மூன்றும் ஆண்டு**
**எதிராஜ் கல்லூரி**

நாம் இதிகாச காலங்களைச் செவ்வனே அறிந்துகொள்ள, சக்கரவர்த்தித் திருமகன், வியாசர் விருந்து என்ற இரு பெரும் அறிவுப் பெட்டகங்களை அளித்தவர். தமிழில் எதையும் கூற முடியும், முயன்று பார்க்க வேண்டும் என்று வழிகாட்ட 'திண்ணை இரசாயனம்' எழுதினார். அவர் காலத்து சமூக நிலையைப் பிரதிபலிக்க ஒரு 'திக்கற்ற பார்வதி' நம் கண் முன் நிற்கிறாள். வாழ்க்கைக்கு வழிகாட்டியான கீதையை எளிமையாகத் தமிழாக்கி ''கை விளக்கு'' எனத் தந்தார். வருங்கால சந்ததியினரையும் மறவாமல் பிஞ்சு நெஞ்சங்களுக்குக் குட்டிக் கதைகள் எழுதினார். இவையனைத்தையும் பரபரப்பான அரசியல் சூழ்நிலைக்கிடையிலும் நேரம் ஒதுக்கிக் கொண்டு எழுதினார் என்றால் வியப்பு மீதூறுகிறது!










## ராஜாஜி – விடுதலை வீரர்

**திரு வை. வேங்கடரமணன் பி. காம்., இரண்டாம் ஆண்டு விவேகானந்தா கல்லூரி**

விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட இவர் வீட்டில் வாழ்ந்ததை விடச் சிறையில் வாழ்ந்த காலமே அதிகமோ என்று மலைக்க வைக்கும் வண்ணம் அத்தனை முறை சிறைத் தண்டனைகளை அனுபவித்தார். கடுமையான ஆஸ்த்துமா நோயுடன் போராடியபடியே சிறைவாசம் அனுபவித்தார். சுதந்திரப் போராட்டம் மட்டும் போதாது, சுதந்திரத்துக்கு நம் மக்களைத் தயார்ப்படுத்த வேண்டும் என்ற நினைப்பில் காந்தி உருவாக்கிய நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றப் பாடுபட்டார். சத்தியாக்கிரக இயக்கத்தின் மூலம் நடந்தது ஒருவிதப் போராட்டமெனில் தமது கூர்ந்த மதியைப் பயன்படுத்தி ஆங்கிலேயரின் அதர்மமான சட்டங்களை எதிர்த்து வாதாடி வென்றதும் உண்டு. ஆங்கிலேயருடன் நடந்த முக்கியமான பேச்சு வார்த்தைகளில் பங்கு பெறல், முக்கியமான மசோதாக்களைத் தயா

ரித்தல் ஆகியவற்றில் ராஜாஜியின் மேதா விலாசம் பளிச்சிட்டது. விடுதலைக்குத் தரும் விலையாக பாகிஸ்தான் பிரிவினையை ஏற்றே ஆகவேண்டும் வேறு வழியில்லை என்று வெகு நாட்கள் முன்பே கண்டு கூறிய தீர்க்கதரிசி.

## ராஜாஜி – அரசியல்வாதி; ராஜதந்திரி

**குமாரி க. உஷா, இரண்டாவது ஆண்டு எம். ஏ. ஸ்டெல்லா மேரி கல்லூரி**

'என்னைப் பண்படுத்திய சக்திகளுள் முக்கியமான ஒன்று' என ராஜாஜியின் சந்திப்புபற்றி கென்னடி குறிப்பிட்டார் எனில் ராஜாஜி எப்பேர்ப்பட்ட உலக மேதையாக இருக்க வேண்டும்? அரசியல் மேதையாக மட்டுமல்லாது ஒழுக்க சீலராகவும் விளங்கியதுதான் இவரது தனிச் சிறப்பு என்பதை நாளைக்கு ஒரு விசாரணைக் கமிஷன் வைக்கப்படும் இந்நாளில் நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். மதுவிலக்கால் ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுகட்ட அவர் கொண்டு வந்த விற்பனை வரி, அவரது ராஜதந்திரத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு. வங்காள வகுப்புக் கலவரத்தை அப்பொழுது கவர்னராக இருந்த இவர் தம் அன்பினால் அடக்கி, இந்து முஸ்லிம் ஒற்றுமையை நிலைநாட்டினார். ரேஷனை ஒழித்து மறுநாளே பதுக்கல் நீங்கி மக்கள் 'அப்பாடா' என்று நிம்மதிப் பெருமூச்சு விட வழிவகுத்தார். 'பாம்பை அடிக்க எந்தத் தடியானால் என்ன' என்று கேட்டு தி. மு. க. வுடன் கூட்டுச்சேர்ந்து காங்கிரஸைத்தோல்வியுறச் செய்தது இவரது சாணக்கியத்துக்கு மற்றொரு சான்று.

## ராஜாஜி – சிறந்த நிர்வாகி

**திரு க. ரவி, இரண்டாம் ஆண்டு பி. காம்., அ. மா. ஜெயின் கல்லூரி**

ஏழை மக்கள், விவசாயிகள் மேல் எப்போதும் அன்புகொண்ட வி.ஆர்., அவர்களின் வாழ்க்கை வளமோடு பிரகாசிக்கக் கடன் நிவாரணம், மற்றும் பண்ணையாள் சட்டமும் கொண்டு வந்தார். அவர் வகிக்காத பதவியே மத்தியிலும், மாநிலத்திலும் இல்லை. ஹைதராபாத் ராஜ்யத்தை நம் இந்திய யூனியனோடு சேர்த்த பெருமை இவருக்கு உண்டு. இந்தியாவின் சிறந்த பதவியான கவர்னர் ஜெனரலாகப் பணி புரிந்தவர், தமது பதவிக் காலத்தில் சொத்து சேர்க்காமல் மக்களுக்காக வாழ்ந்தார். குடியரசு தினத்தன்று ராஜேந்திரபிரசாத்திடம்பொறுப்பை அளித்துவிட்டு, அன்றே சென்னையில் தமது சிறிய வீடு திரும்பி, சற்றும் மன வருத்தம் இல்லாமல் இலக்கியப் பணியில் ஈடுபட்டார். தாம் முதல்வராக இருந்தபோது 'எம்.எல்.ஏ.க்கள் செகரடேரியட் வராந்தாக்களில் நடமாட வேண்டாம்' என்று அவர் கூறிய அறிவுரை என்றென்றும் பொன் மொழியாகக் கருதப்படவேண்டியதாகும். பேட்டி : **"சிக்கி"**

---

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras - 600 032. Editor: K. Rajendran

# புதிய திருப்பம்

ஒளி கூட்டும் ஸ்டைல்கள்—
எழில் காட்டும்
புதிய பாணிகள் — உங்கள்
அழகுக் கோலத்தை
வெளிப்படுத்தும்.

**மபத்லால் இண்டஸ்ட்ரீஸ்** நியூ ஷொராக் மில்ஸ்

**மபத்லால் ஃபைன்**

சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள்,
சேலைகள், மற்றும் உடுப்புத் துணிகள்











79/MFI/312-tm

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேயக் காசு

பரம்பரைப் பண்பாடு...
மாறிவரும் நாகரீகம்...

## இரண்டையும் இணைக்கும் ஈடற்ற பாலம் எஸ்.குமார்ஸ்.

மாறிவரும் நாகரீகத்தைப் பிரதிபலிக்கும் எங்கள் துணிகளில், காலத்தால் மாற்றமுடியாத பண்பாட்டுக் கலாசாரமும் இணைந்துள்ளது. எங்கள் துணிகளின் நெசவு, கண்கவர் டிசைன் ஆகியவற்றோடு அவற்றின் தரம், நீடித்த உழைப்பு, மற்றும் நீங்கள் செலவிடும் பணத்திற்கேற்ற மதிப்பு ஆகியவற்றிலும் நாங்கள் கவனம் செலுத்துகிறோம். எனவே சிறந்த துணிகளை வாங்க விரும்பினால், எஸ்.குமார்ஸ் துணிகளையே வாங்குங்கள். சிறந்த லாபமடைவீர்கள் என்பதற்கு இதுவே உத்தரவாதம்.



**எஸ்.குமார்ஸ்®**

'டெரீன்' ஸூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், புடவைகள் மற்றும் 'டெரீன்' வொர்ஸ்டட் ஸூட்டிங்குகள்.

''நிரஞ்ஜன், 99, மரீன் ட்ரைவ், பம்பாய் 400 002.

## அதி உன்னத தரம்...மிகக் குறைந்த விலையில்.

Sista's-SK-829/79 Tam